Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1; சிலோன் ,, 1½; மலேயா, பர்மா ,, 2 }

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

விளம்பர விகிதம்

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கரு ஈசுவர ஆனிமீ கஉஉ (25—6—1937) வெள்ளிக்கிழமை பரல் ரு

## திருமூலர்

பண்டம்பொய்க் கூரை பழுகி விழுதலால்
உண்டவப் பெண்டிரு மக்களும் பின்செலார்
கொண்ட விரதமு ஞானமு மல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே. (1)

ஊரெலாங் கூடி யொலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. (2)

ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரு மக்களும்
ஊர்த்துறை காலே யொழிவா ரொழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரி மூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. (3)

வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றும்
குளத்தின்மண் கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தாலவை யோடென் றுவைப்பர்
உடலிறந் தாலிறைப் போதும்வை யாரே. (4)

## திருப்பாவை

(பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மாள்)

VII

திருப்பாவையின் பொருள்கள்

ஒரு நூலில் பல பொருள்களைப் பகர்ந்திருப்பினும் அவற்றுள் சிலவே சிறந்தனவாகும், மற்றவையாவும் அவற்றிற்கு உறுப்புகளாகவோ அன்றி குறிப்புகளாகவோ இருத்தல் மரபு. அங்ஙனமே இந்நூலில் இயம்பும் பொருள்கள் பல. ஆயினும் அவற்றுள் மூன்றே தலைசிறந்தன.

1. மேற்கொண்ட நோன்பியற்றுதற் பொருட்டுச் செல்வத்திலும், அழகிலும், அறிவிலும், பக்தியிலும் சிறந்து விளங்கிய மங்கையரைத் துயிலெழுப்புதல். (அஞ்ஞானமாகிய தூக்கத்தைப் போக்கி ஞானத்தை யூட்டுதல்.)

2. கண்ணன் வீரம் நிறைந்த மாயச் செயல்களைப் பேசுதல்.

3. அப்பெருமானை யடைந்து நாம் விரும்பிய அழியாக் கைங்கர்யத்தைப் பெறுதல். இம்மூன்று பகுதிகளையும் முதற்பாசுரமே நன்கு விளக்குகிறது.

1. மார்கழித் திங்கள்
மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்
போதுமினோ நேரிழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச்
செல்வச் சிறுமீர்காள்.

2. கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி
யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம் போல்முகத்தான்.

3. நாராயணனே நமக்கே பறைதருவான்.

மற்றையோர் கூற்று

சிலர் நூலெழுதப் புகுங்கால் ஒரு பொருளைத் தலையாகக் கொண்டு இடையில் பல பொருளில் உலாவி அவ்விரிவினால் எடுத்ததைக் கூட்டி முடிக்காது வேறு ஒன்றைக் கூறிச் செல்வதுமுண்டு. அது படிப்போருக்கும், கேட்போருக்கும் இன்பந்தருதல் இல்லை. எங்ஙனம் ஓங்கிய மூங்கிலின்மேல் நின்று நடிக்கும் கழைக்கூத்தாடி ஒருவன் பல விதச் செய்கைகளைச் செய்யினும் கழையிலும், காலிலும் தன் கண்ணையும் கருத்தையும் ஊன்றி வைத்துள்ளனனோ அங்ஙனமே மக்கள் மனத்தை இன்புறுத்தப் பலபொருள்களை இடையிலே விரிக்கினும் எடுத்த பொருள்களைத் தொட்டுக்கொண்டே அதன்மேல் கருத்தைச் செலுத்தி முடித்தலே தகுதி. அதுவே படிப்போருக்கும், கேட்போருக்கும் இன்பத்தையூட்டுவது. அவரே உயரிய உரையாளரும், எழுத்தாளரும் ஆவர். அவரையே உலகம் புகழ்ந்து போற்றும். அவருள் தலைசிறந்த நம் ஆண்டாள் தாம் எடுத்துக் கொண்ட மூன்று பொருள்களையும் நூலின் இடையிடையே தொட்டுக்கொண்டே செல்லுகின்றார். அன்றியும் அம்மூன்று பொருள்களையே அவர் இறுதிப் பாசுரமும் வற்புறுத்துகின்றது.

1. திங்கள் திருமுகத்துச் சேயிழையார்
2. வங்கக்கடல் கடைந்தமாதவனைக் கேச[வனை]
3. பறைகொண் டவாற்றை.

இவை இறுதிப் பாசுரத்தின் அடிகள்.

ஈதன்றோ நூல் செய்யுந் திறமை. இத்திறமை யாவருக்கும் அமைவது அருமையினுமருமையே. தெய்வஅருள் பெற்ற நம் அன்னையாரைப் போன்ற சிலருக்கே அது கைகூடுவதாகும்.

முதற் பகுதியை ஆராய்வாம்

முதற் பாசுரத்தில் ஆயர்பாடிப்பெண்களை நம் அன்னையார் நேரிழையீர்! சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் என அழைத்தனர். இறுதிப்பாசுரத்தில் திங்கள் திருமுகத்துச் சேயிழையார் என விளித்தனர். இவற்றுள் நேரிழையீர், சேயிழையார் என்னும் சொற்களின் பொருத்தத்தைக் காண்க. இனி பொருள் பொருத்தத்தை நோக்குவாம்.

கண்ணனைச் சென்றடைய வேண்டுமென்ற எண்ணங்களாகிற ஆபரணங்களை அணிந்து அச்செல்வத்தில் திளைத்துள்ளவர்களே! நீங்களோ, நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற சுதந்திரக் கருத்தைக் கொண்டவர்களல்லர். தாயையே கருதி நிற்கும் பச்சைப் பசுங் குழவியைப் போன்று ஈஸ்வரனையே உபாயம் உபேயம் என நினைத்துள்ள சிறுமியர்கள் என முதலில் விளித்தனர். அவர்கள் கருத்திற் கேற்ப அவனைப் பெற்றுவிட்டனர் என்பது தோன்ற இறுதிப்பாசுரத்தில் கண்ணன் அங்கீகாரத்தினால் - ஏற்பட்டமகிழ்வையே ஆபரணமாகக் கொண்டுள்ள குளிர்ந்த மலர்ந்த முகத்தையுடையவர்களே என்கிறார். இன்னும் முதலில் ஈஸ்வரனை மதிபோன்ற முகம் என அவர் நாவழங்கிற்று. முடிவில் பெண்களைச் சந்திரன் போன்ற அழகிய முகம் என அவர்வாய் விளிக்கின்றது. கண்ணனுடன் சேர்ந்த பெண்களும் அவனைப் போன்றே ஆய்விட்டார்கள் என்பது ஆண்டாள் கருத்து. சேர்ந்த இடத்திற்கேற்பப் பொருள்கள் திரிதல் இயல்பன்றோ! நேரிழையீர், சேயிழையார் இவ்விரு சொற்களும் ஞான பக்தி, வைராக்கியங்களாகிற ஒளியைப் பெற்றவர்களே எனப்பொருள்படும்.

இம்முறையில் கண்ணன், பெண்கள் ஆகிய இருதிறத்தினர் முகமும் ஒரு தன்மைப் பட்டதேயாயினும் அவற்றுள் சிறிது வேற்றுமையையுங் கோதையார் காட்டுகின்றார். கண்ணன் முகம் ஆதித்தனாகவும், சந்திரனாகவும் அப்போதைக்கப்போது மாறுந் தகைமைத்து என்பதைக் காட்ட கதிர் மதியம்போல் முகத்தான் என்றார்; அன்றியும் அவன் முகத்தை வெறும் மதி எனக் கூறினரேயன்றி மாசு நீங்கிய மதியெனப் பகர்ந்தாரில்லை. பெண்களை இயம்புங்கால் திங்கள் திருமுகம் எனக் கழறுகின்றனர். இவ்வழியில் பெண்கள் முகம் எப்போதும் சந்திரனைப் போன்று குளிர்ந்திருக்கும் குணமுடையது, குற்றமற்ற மாட்சியுடையது என நிலைநாட்டுகின்றனர். இத்தன்மையில் பெண்களுக்கு அவர் கொடுத்திருக்கும் உயர்வு தெள்ளிதின்புலனாகும்.

இரண்டாம் பகுதியை ஆராய்வாம் :—

"கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை
இளஞ் சிங்கம்.

இச்சொற்றொடரிலுள்ள குமரன், சிங்கம் என்னும் சொற்கள் மிக்கபிடிக்குடைமையையும், வாய்மையையும் காட்டுகின்றன. அவற்றைச் சொல்லளவில் மட்டும் நிறுத்தினால் போதியதாமோ! குணவதி என்னும் பேரமைந்த ஒருத்தி நற்குணமற்றிருப்பின் அப்பெயரினால் பயன்யாது? ஆகவே முதற் பாசுரத்தில் கெம்பீர பேர்களைப் பகர்ந்த நம் அன்னையார் அத்திருநாமங்களுக்கேற்ற செய்கையை வங்கக்கடல் கடைந்த என்னும் இறுதிப்பாசுரத்தில் நிறுத்திக் காட்டுகின்றார். கடல் கடைதல் போராற்றலுடையவனாலன்றி, மற்றையோரால் முடிவதொன்றாமோ!

கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம் போல்முகத்தான்.

மேற் கூறிய சொற்றொடரில் கார் என்பது செம் என்பதற்கும், கதிர் என்பது மதியம் என்பதற்கும் முரணாக அமைந்து முரண்தொடை தோன்ற நிற்றலை நோக்குக. இம்முறையில் எங்ஙனம் அவன் வடிவில் முரண்பாடுள்ளதோ அங்ஙனமே அவன் கருத்திலும் முரண்பாடுள்ளது. மழை பெய்ய நோன்பு நோற்றுவித்தல் என்பது அவன் வெளிக் கொள்கை. பெண்களை அங்கீகரித்துத் தூய்மைப்படுத்தவேண்டுமென்பது அவன் உட்கோட்பாடு. அவற்றை வெளிப்படுத்தற் பொருட்டுத்தான் நம் அன்னையார் இத்தகைய சொற்களை இவண் பொருத்தினர் போலும். இதைப் போன்றே இறுதிப் பாசுரத்திலும் மாதவனை, கேசவனை என இருமுரண் சொற்கள் திகழ்கின்றன. இதுவும், முரண்சொற்களேயாகும்.

மாதவன்—மிக்க எளியனைப் போன்று நடித்துக் கடல் கடைந்து பிராட்டியை ஏற்றுக் கொண்டவன்.

கேசவன்— தேவர்களுக்குள் தலைமைபெற்றுக் கேசி என்ற இராக்கதனை அழித்தவன்.

இங்கும் செய்கையொன்று கருத்து வேறொன்றே. தேவர்க்கு அமுதம் தரக் கடல் கடைந்தான் என்பது மேல் போக்கு. ஆனால் பெரியபிராட்டியாராகும் பெண் அமுதத்தைப் பெறவே அவன் கடைவதில் பெருமுயற்சி எடுத்தது.

தான் ஸாக்ஷாத் அம்ருத்தை யுண்டு பிரஹ்மாதிகளுக்குக் கோதைக்கொடுத்தான் என்னும் பட்டர் வாக்கை நோக்குக.

கதிர்மதியம் போல்முகத்தான் என்பது கண்ணன் சந்திரனையும், சூரியனையும்போன்ற முகத்தை யுடையவன் எனப் பொருள்படும். இவ்விருவகை இயல்புகளும் ஒரேமுகத்தில் தோன்றுதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. தன்னை அடுந்தவரை மதி போன்ற குளிர்ந்த முகத்தினால் மகிழ்விக்கிறான். தன்னை வெறுக்குந் தீயாரை ஆதித்தன்போன்ற வெம்மைமுகத்தால் வருத்துகிறான். இவ்விருசெய்கைகளும் வங்கக் கடல் கடைந்ததில் நடைபெற்றதை அறிந்துள்ளோம். அமுதமீந்து தேவர்களை இன்புறுத்தலும், அமுதத்தை ஈயாது அசுரர்களைத் துன்புறுத்தலுமாகும்.

மூன்றும் பகுதியை ஆராய்வாம் :—

முதலில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" எனக் கோதையார் இருபிரிநிலை ஏகாரங்களைக் கொடுத்துப் பேசுகின்றனர். பின்பு நாமோ அவனையே உற்ற துணை என நினைத்துள்ளோம். அவனே உலகிற்குக் காரணப் பொருளாய் யாவரையும் ஈடேற்ற உறுதி கொண்டுள்ளான். ஆதலின் அவனிடம் நாம் வீட்டின் பேற்றைப் பெறுதற்குத் தடையாது? இதில் ஐயமில்லை என்னும் ஊன்றிய நம்பிக்கை அவருக்குண்டாயிற்று. அந்நம்பிக்கையே அவரைக் கரையேற்றும் தோணியென நின்றது. கடவுளை நம்பினோர் கைவிடப்படுவரோ? அங்ஙனமே அவர் கைவிடப் படாமல் விரும்பியதைப் பெற்று மகிழ்ந்தனர். இதை அவர் இறுதியில் இயம்பிய "அங்கு அப்பறை கொண்டவாற்றை" (அக்கைங்கர்யத்தைப் பெற்ற தன்மையை) என்னும் மொழிகள் நன்கு தெளிவுறுத்துகின்றன. ஈதன்றோ நம்பிக்கை என்பது. நம் கோதையாரின் உறுதியே உறுதி. இத்தகைய ஊன்றிய நம்பிக்கை என் நன்மையைத் தாராது? உலக விஷயங்களில் கொள்ளும் நம்பிக்கையே சில போது உயர்வளிக்கின்ற தன்றோ! அங்ஙனமாயின் இறைவன் சார்பாகக்கொள்ளும் நம்பிக்கையைப் பற்றிப் பகரவும் வேண்டுமோ!

---




வந்தே மாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கசு | ஈசுவரஹு ஆனிமீ கஉஉ (25—6—1937) வெள்ளிக்கிழமை | பரல் ௫


## சிலம்பொலி

### முடியா? காதலா? அல்லது சீர்திருத்தமா?

திரு. வி. க.

VIII

எட்வர்ட் - ஸிம்ஸன் காதல் நீடியாதென்றும், எப்படியாவது அது முறிந்து போகுமென்றும் பிரபுக்கள் கருதி, அதன்மீது கவலை செலுத்தாதிருந்தார்கள். பின்னே நிகழ்ச்சிகளை நோக்க நோக்க அவர்கள் வாளாகிடக்க விரும்பினார்களில்லை. காதல் மணமாக முடியும் என்னும் உறுதி அவர்கட்கு ஏற்பட்டது. திருமதி ஸிம்ஸன் மணவிலக்குக்கென்று திரு. ஸிம்ஸன்மீது தொடுத்த வழக்கில் வெற்றி பெற்றமை பிரபுக்களை நடுக்குறச் செய்துவிட்டது. அவர்கள், மன்னர் முடி சூட்டு விழா மே மாதத்தில் நடைபெறுமென்றும், அதற்குள் அதாவது ஏப்ரலுக்குள் ஆறுமாதத் தவணையுந் தீர்ந்துவிடுமென்றும், மன்னர் மணமுடித்தே முடிசூட்டிக்கொள்வரென்றும், மன்னரே ஏழைகளிடத்தில் இரக்கமுடையவரென்றும், அவருடன் மற்றுமோர் ஏழை சேர்ந்தால், பிரிட்டன் நிலைமை என்னாகுமென்றும், உலகிலோ சமதர்மக் கிளர்ச்சி வீறுகொண்டு நிற்கிறதென்றும் இரவு பகல் எண்ணி எண்ணிக் கலாம் விளைக்கத் துணிவு கொண்டார்கள்.

பிரபுக்கள் எவ்வழியில் கலாம் விளைக்கவல்லார்கள்! அவர்கள் நேர் முகமாக எதையுஞ் செய்யமாட்டார்கள். அவர்கள் திரை மறைவு வேலையில் பேர்பெற்றவர்கள்; திரை மறைவிருந்தே பொறிகளைத் தூண்டுவார்கள். பாவைகள் அவர்கள் வழி ஆடத் தொடங்கும். அப்பொறியற்ற பாவைகளின் வாயிலாக அவர்கள் தங்கள் கருத்தை நிறைவேற்றிக் கொள்வார்கள். இஃது அவர்களது தொன்றுதொட்ட வழக்கம்.

பிரபுக்கள் ஆட்டும் பாவைகள் எவை? பாதிரிக் கூட்டங்கள் என்று சொல்ல வேண்டுவதில்லை. பிரபுக்கள் நலத்துக்கென்றே பாதிரிகள் வாழ்கிறார்கள். சமயம் நேரும்போது "மதம்" என்னும் போர்வையால் பாதிரிகள் பிரபுக்கள் கட்சிக்குத் துணை போவார்கள். வழக்கப்படி பிரபுக்கள், பாதிரிகளைக் கொண்டே கலாம் விளைக்கப் புகுந்தார்கள். பிரபுக்கள் நெஞ்சில் இருள்சூழ்ந்தது; கருமை கொண்டல் கொண்டலாக எழுந்தது; சூழ்ச்சிகள் செறிந்தன. சதியாலோசனைக்கென்று ஒரு கூட்டம் திரண்டது.

லார்ட்ஸ் சபையில் ஒருமுடுக்கில் சில பிரபுக்களும் சில பிஷப்புகளுங் கூடினார்கள்; ஆழ்ந்து ஆழ்ந்து நிலைமையை ஆய்ந்தார்கள். சூழ்ச்சிகளெல்லாம் ஒன்று பட்டன. அவை "திருமதி ஸிம்ஸன் இருமுறை மண முடித்தவர். இரு கொழுநன்மாரும் உயிருடன் இருக்கிறார். அத்தகைய ஒருவரை எட்வர்ட் மணஞ்செய்ய உறுதிசெய்தால், மணவினையில் பாதிரிமார் கலந்துகொள்ளுதல்கூடாது. முடி சூட்டுதற்குக் காண்டர்பரி ஆர்ச்பிஷப் மறுப்புரை வழங்கவேண்டும்" என்னும் பலவித நச்சுக் கருவிகளைக் கொண்ட வெடிகுண்டாயின. அக்குண்டை எறியுமாறு பிராட்போர்டு பிஷப் கேட்டுக்கொள்ளப்பட்டார். அவரும் உடன்பட்டனர்.

உடன்பட்டவாறே முடுக்கில் செப்பஞ் செய்யப் பெற்ற வெடிகுண்டை, பிராட்போர்டு பிஷப் ஓரிடத்தில் ஓங்கி எறிந்தார். ஒரே வெடி! பிரிட்டன் அதிர்ந்தது; பார்லிமெண்ட் நடுங்கியது; மந்திரி சபை கலங்கியது. எங்கணும் புகை மேகமெனச் சூழ்ந்தது; கமழ்ந்தது. கருவிகள் மின்னி மின்னி இடித்து இடித்து நஞ்சைப் பொழிந்தன. நஞ்சு எரிகிறது; எழுகாவிட்டு எரிகிறது. எரி பத்திரிகை உலகைப் பற்றியது. பத்திரிகை உலகைப்பற்றிய எரி எளிதில் தணியுமோ?

பத்திரிகைகள் மனம் போனவாறு எழுதத் தொடங்கின. சாதக பாதகக் கருத்துகள் வெளிவரலாயின. அமெரிக்கப் பெண்மணியை ஆங்கில மன்னர் மணம் புரிந்து கொள்ள ஆங்கிலேயர் விரும்பவில்லையென்றும், இழிவுற்ற பெண்களை இன்னின்ன ஆங்கில மன்னர் மணம் புரிந்தனரென்றும் அமெரிக்கப் பத்திரிகைகள் தூற்றத் துணிந்தன. ஆங்கிலப் பத்திரிகைகள் தக்க விடை பகர்ந்து கொண்டே வந்தன. இருநாட்டுப் பத்திரிகைகளும் பத்திரிகை யுலகையே கலக்கிவிட்டன. எங்கணும் எட்வர்ட்-ஸிம்ஸன் பேச்சாயது. எட்வர்ட்-ஸிம்ஸன் நிலவாத இடமேயில்லை.

"பிரிட்டனுக்கு என்ன நேருமோ! சாம்ராஜ்யத்துக்கு என்ன நேருமோ! குழப்ப மற்ற பிரிட்டனுங் குழப்பங் காண நேர்ந்ததே!" என்று பிரிட்டிஷ் மக்கள் ஏக்குற்றார்கள். அஞ்சாநெஞ்சுடைய ஆங்கிலமாதின் - அகிலத்திலும் ஆட்சி புரியும் ஆங்கிலமாதின்-பொறிபுலன்கள் கலங்கின; அவள் மெய்ம்மறந்தாள்; விழித்தாள்; சூலைநோய் அவளை முடுக்குகிறது; குடரோடு தொடக்கி முடுக்குகிறது. மருத்துவர் - முதல் அமைச்சர் - திரு. பால்டுவின் புறப்பட்டார்!

இங்கிலையில் திருமதி ஸிம்ஸன் தாம் இங்கிலாந்தி விருத்தலாகாதென்றும், மன்னர் விரும்புமாறு செய்வது ஆக என்றும் எண்ணி, இங்கிலாந்தை விடுத்துக் கடல்கடந்து, பிரான்ஸிலுள்ள ஒரு சிற்றூருக் கேகினார். அம்மையார் காற்றெனப் பறந்தாரோ - காரெனப் பறந்தாரோ - ஆண்டவனே அறிவன். அழகிய அமெரிக்க வானம்பாடி இங்கிலாந்தினின்றும் எப்படியோ பறந்து விட்டது!

எட்டாம் எட்வர்டோ மன்னர்! சாம்ராஜ்யத் தலைவர்! நிகழ்ச்சி அவரையொட்டியது. இங்கிலாந்தின் ஆட்சி கோனாட்சியன்று. அது குடிக்கோனாட்சி. பொறுப்பை வகிப்பது மந்திரி சபை. திரு. பால்டுவின் மந்திரி சபையைக் கூட்டினார்; நிலைமையைக் கூர்ந்து கூர்ந்து ஆய்ந்தார்; ஆய்ந்தபின் அரச மாளிகை நோக்கினார்.

மன்னர் பெருமான் முகமலர்ச்சியுடன் வீற்றிருக்கிறார். அவரை முதலமைச்சர் கண்டார். இருவரும் கலந்து பேசத் தொடங்கினர். பையப்பையத் திரு. பால்டுவின் உலகில் கொந்தளிப்பை விளைத்துக்கொண்டுள்ள ஒன்றைப் பற்றி உரையாடலானார். உரையாடல் விட்டுந் தொட்டும் ஏறக்குறைய ஒரு வாரம் நடைபெற்றது. இடையிடை மந்திரிசபை பன்முறை கூட்டப்பட்டது; இரண்டொருமுறை பார்லிமெண்டுங் கூட்டப்பட்டது.

சுழற்சி எழுந்தது; ஓரிடத்திலா எழுந்தது! எங்கணும் எழுந்தது! அரசகுடும்பம் சுழல்கிறது; மந்திரி சபை சுழல்கிறது; பார்லிமெண்ட் சுழல்கிறது; பிரிட்டன் சுழல்கிறது; சாம்ராஜ்யம் சுழல்கிறது; மண்ணுஞ் சுழல்கிறது; விண்ணுஞ் சுழல்கிறது; எல்லாஞ் சுழல்கின்றன. எது சுழன்றும்—எல்லாஞ் சுழன்றும்—எட்வர்ட் நெஞ்சஞ் சுழலவில்லை.

அன்னையார் என்னென்னவோ சொல்லியிருப்பார்; மற்ற அரசகுடும்பத்தினர் என்னென்னவோ சொல்லியிருப்பர்; பால்டுவின் எவ்வளவோ சொல்லியிருப்பார்; பிறரும் பல சொல்லியிருப்பர்; எவர் சொல்லும் எட்வர்ட் செவியில் ஏறவில்லை. அவர் "யார்யாரெனக்கென்ன போதித்தபோதிலும் என் அறிவைதான் மயக்கவசமோ" என்று உறுதியில் நின்றார். "பெண்ணணங்குக்கு உரைத்த உறுதிமொழியினின்றும் யான் பிறழேன்; பிறழேன்" என்னும் பதிலே எட்வர்டினிடமிருந்து பிறந்தது.

திரு. பால்டுவினும் எட்வர்டும் பேசிய பேச்சுக்களில் சில வெளிவந்தன. அவைகளுள் ஒருபகுதி உன்னற்பாலது. திருமதி ஸிம்ஸனை மணஞ் செய்யாது வைப்பாட்டியாக வைத்துக்கொள்ளுமாறு அமைச்சர் அரசருக்கு அறிவுறுத்தினாராம். நல்ல அமைச்சர்! அதற்கு அரசர்,

"புலையனும்விரும் பாதவிப்
புன்புலால் யாக்கை
நிலையெனுமருண் டயிரினு
நெடிதுறச் சிறந்தே
தலைமைசேர்தரு சத்தியம்
பிறழ்வது தரியேம்
கலையுணர்ந்தநீ எமக்கிது
கழறுவ தழகோ"

என்னும் பாட்டுக்கு இலக்கியமாகி நின்று, "அவ்விழி செயலுக்கு யான் உடன்படேன்" என்று கூறினாராம். அரசர்பாலுள்ள ஒழுக்கத்தின் விழுப்பத்தைப் பாருங்கள். "ஒழுக்கம் விழுப்பந்தரலால் ஒழுக்கம்—உயிரினும் ஓம்பப் படும்" என்பது திருவள்ளுவர் வாக்கு.

எட்டாம் எட்வர்டின் தம்பிமார் மணஞ்செய்து வாழ்வு நடாத்துகிறார். எட்வர்டோ மணமின்றியே காலங் கழித்து வந்தார். நண்பர் சிலர் அவரை நோக்கி மணஞ் செய்யாதிருப்பதற்குக் காரணங் கேட்பாராம். அதற்கு எட்வர்ட் "எனக்குரிய பெண் இருக்கிறாளா?" என்று சிலவேளை பதிலிறுப்பாராம்; சிலவேளை "எனக்கு அரச குமாரிகளும் லார்ட் வீட்டுப் பெண்களும் பிடிக்கவில்லை. எளிய வாழ்க்கை நடாத்தும் இனிய பெண் தேவை" என்று சொல்வாராம்.

எட்வர்ட் யார்? மன்னர் வழித் தோன்றல்; மன்னரால் மன்னராக வளர்க்கப்பட்டவர். அவர்மனம் எங்கே ஈடுபட்டுக் கிடக்கிறது! பிறவிக்கூறுகள் பலவிதம்.

எட்வர்ட் ஒருத்தியுடன் வாழவே விரும்பினார். "மனைவி ஒருத்தி! அவளுடன் கூத்தி இன்னொருத்தியா! கொடுமை! கொடுமை!" என்று எட்வர்ட் செவிகளைப் பொத்திக் கொண்டாராம். திரு. பால்டுவின் விழித்தார்.

எட்வர்ட் மன்னர் தம் பேச்சிடை ஒன்று கூறினாரொன்று பத்திரிகை யுலகம் தெரிவித்தது. அதைத் திரு. பால்டுவின் பார்லிமெண்டுக்கோ சாம்ராஜ்ய மந்திரிகளுக்கோ தெரிவிக்கவில்லை; தெரிவித்திருந்தால் நிலைமை வேறு விதமாக முடிந்திருக்கும். திரு. பால்டுவின் பெருந்தவறே செய்துவிட்டார். நியாயத் தீர்ப்பு நாளில் பால்டுவின் என்ன சொல்வரோ? என்ன செய்வரோ?

எட்வர்ட், தமக்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் கான்முளை தோன்றினால் அதற்கு அரசுரிமை நல்கப்பட வேண்டுவதில்லையென்று தாம் உறுதி கூறுவதாகச் சொன்னார். இப்பொன்னுரையைத் திரு.பால்டுவின் வெளியிட்டிருப்பின், நிலைமை ஒழுங்குபட்டிருக்குமன்றோ?

மற்றுமொன்று ஈண்டுக் குறிக்க விரும்புகிறேன். அது பார்லிமெண்ட் நிகழ்ச்சி. எட்வர்ட் - ஸிம்ஸன் காதல் காரணமாகச் சிலமுறை பார்லிமெண்ட் கூட்டப்பட்டது. ஒரு கூட்டத்திடை கார்னல் வெட்ஜ்வுட் இரண்டொரு மொழி பகர்ந்தார். அம்மொழி ஈண்டுக் கருதற்பாலதே.

"எட்டாம் எட்வர்டே நம்மன்னர். ஐந்தாம்ஜார்ஜ் இறந்ததும் எட்வர்டே நம் மன்னரானார். திருமணம் முதலியன மன்னர் விருப்பத்தை யொட்டியன. அதைப் பற்றி நாம் ஏன் பேசுதல் வேண்டும்? முடி சூட்டல் என்

பது தொன்றுதொட்டு வரும் ஒரு சிறு சம்பிரதாயம். அதற்கும் மன்னர் பீடத்துக்கும் என்ன தொடர்பு?

என்று வெட்ஜ்வுட் மொழிந்தார். அதற்குச் செவ்வனிறை இறுக்கப் பெறவில்லை.

இப்பொழுதுள்ள பார்லிமெண்டில் கர்னல் வெட்ஜவுட்டை ஆதரிப்போர் தொகை மிகச் சிறியது. அதன்கண் கன்ஸர்வெடிவ் கட்சியே ஆக்கம் பெற்றிருக்கிறது. அக்கட்சிச்சார்பில் மந்திரிசபை அமைக்கப்பட்டிருக்கிறது. கன்ஸர்வெட்டிவ்கள் முதலாளிகளாகவும் முதலாளிகளை ஆதரிப்பவர்களாகவுமிருப்பவர்கள். அவர்கள் எப்படிப் பிடிவுகளுக்கு மாறுபட்டு நடப்பார்கள்? பார்லிமெண்டின் பெரும்பான்மை அத்தகையவர்களிடத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறது.'

ஜனநாயகம் என்பது பெரும்பான்மையைத் தழுவி நிலவும் ஒருமுறை. நல்லதோ கெட்டதோ - நீதியோ அநீதியோ பெரும்பான்மை வாக்கால் நிறைவேறப் பெறுவதே ஜனநாயகத்தில் ஏற்றுக்கொள்ளப்படும். ஜனநாயகத்தில் சில சமயங்களில் அறிவுத் தெய்வம் இடம் பெறுது நெருக்குண்டு சிறுமை யுறுவதுண்டு. ஜனநாயகத்தில் மூடரோ பிடிவாதக்காரரோ தொகையில்மட்டும் பலராயிருந்துகொண்டு அறிஞரையும் அறவோரையும் வீழ்த்தல்கூடும். அறிவற்ற பெரும்பான்மையால் தீங்கே விளையும். தற்கால ஜனநாயகத்தில் அறிவும் அறமுங் குன்றிவரல் கண்கூடு.







# எதிரொலி

## ஒரே மூச்சில் நெருப்பும் ஜலமும்!

லார்டு ஜெட்லந்து ஒரே மூச்சில் நெருப்பும் ஜலமுமாகக் கக்குகிறாரே! 'இஷ்டமிருந்தால் எடுத்துக்கொள்ளட்டும்; இல்லாவிட்டால் போகட்டும்' என்று அவர் இறுமாந்து பேசினார் முதலில். அப்புறம் கண்ணைத் திறந்து விழித்துக்கொண்டார். தேன் ஒழுகும் வார்த்தைகளும், அறிக்கைகளும் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. முதுகில் தட்டிக் கொடுத்து ஸ்தோத்திரம் செய்யக்கூட ஆரம்பித்தார். ஆனால் வெறும்வார்த்தைகளால் ஏமாறக்கூடியவர் இந்தியர் அல்லர். அந்த நாள் மலையேறிவிட்டது.

—'ஸர்ச் லைட்'

## கல்வி மந்திரி கவனிப்பாரா?

வங்காளத்தில் அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகளுக்கு மத்தியானச் சாப்பாடு அளிக்கப்படுகிறது. இத்திட்டம் 1930-ம் வருஷம் ஆரம்பிக்கப்பட்டது. இது வெற்றிகரமாகவே நடைபெறுவதாக வங்காளக் கல்வி யிலாகா கருதுகிறது. இதனால் மற்றப் பள்ளிக்கூடங்களிலும் இத்திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரக் கருதுவதாகத் தெரிகிறது. சிறு குழந்தைகள் காலை பத்து மணிமுதல் மாலை நாலு மணி வரை பள்ளிக்கூடத்தில் இருக்கிறார்கள். நடுவில் கிடைக்கும் ஓய்வு நேரத்தில் அவர்களுக்குச் சாப்பாடு போட வேண்டியது அவசியமாகும். அத்திட்டத்தை அரசாங்கம் முதலில் அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் செய்து பரிசைஷ பார்க்கலாம். பிறகு வேண்டுமானல் மற்றப் பள்ளிக்கூடங்களுக்கும் அத்திட்டத்தைச் சமர்ப்பித்துப் பண உதவி செய்யலாம். நமது மாகாணத்திலுள்ள கல்வி மந்திரி இதைக் கவனிப்பாரா?

—"ஹிதவாதா"

## ஜான்ஸிபார் இந்தியர்

வெளி நாடுகளில் இந்தியர் நிலைமை வரவர மோசமாகிக் கொண்டே வருகிறது. அவர்களது நியாயமான உரிமைகளைக் கூடப் பாதுகாக்க முன்வருவாரில்லை. ஜான்ஸிபாரில் லவங்கத்தொழில் நம் நாட்டுச் சகோதரர்களால் அபிவிருத்தி செய்யப்பட்டது. ஸ்தல மக்கள் அதனால் சிறிது வருத்தம் அடைந்திருக்கலாம். ஆனால் அவைதீர்க்கவும் பட்டிருக்கும். காங்கரஸ் அவ்வேலையை ஏற்றுக் கொண்டிருக்கும். அங்குள்ள வர்த்தகர்களுக்கு உதவிபுரிவதாகச் சொல்லி வேஷம் போட்டுக்கொண்டு பிரிட்டிஷ் வர்த்தகர்களுக்குச் சலுகை காட்டப்படுகிறது. அதனால் இந்தியர் கஷ்டப்படுகிறார். இந்தியர்களால் அபிவிருத்தி செய்யப்பட்ட வர்த்தகத்தை அழிப்பதால் ஜான்ஸிபார் வாசிகளுக்கு லாபமுண்டா? உண்டானல் போனல் போகிறது. நம் இந்தியர் கஷ்டப்படலாம். ஆனால் இந்தியர்க்குமின்றி ஜான்ஸிபார் வாசிகளுக்குமின்றி அந்த லாபம் வேறு முதலாளிவர்க்கத்துக்கன்றோ போகிறது!

—"காங்கரஸ் ஸோஷலிஸ்ட்"

## இன்ஷியூரன்ஸ் ஆக்சுவரிக்கு இந்தியர்!

இன்ஷியூரன்ஸ் ஆபீஸ் சங்கத்தின் தலைவர் ஸிம்லாவுக்கு ஒரு கடிதம் எழுதினார். இன்ஷியூரன்ஸ் சூப்பிரெண்டெண்டு பதவிக்கு ஓர் இந்தியரை நியமிக்க வேண்டுமென்று அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். ரயில்வே போர்டில் காலியாகவிருக்கும் காரியதரிசி பதவிக்கு ஓர் இந்தியரையே நியமிப்பதாக உறுதியளிக்க வேண்டுமென்று சட்டசபையில் ஸாபருல்லாகானைக் கேட்டபொழுது அவர் என்ன சொன்னார் தெரியுமா? இந்தமாதிரியான 'வகுப்புவிஷயமான' கொள்கைகளுக்கு அரசாங்கம் இடங்கொடாது' என்று தெரிவித்தார்.

தேசிய வாதியான ஸாபருல்லாவையே 'வகுப்புவாதி'யாக்கச் சட்டசபை தவறி விட்டதே! இன்ஷியூரன்ஸ் சங்கத் தலைவர் இதில் வெற்றி யடைந்து விடலாமென்று நினைக்கிறாரா? எந்த எந்த இலாகாவில் காலி விழுகிறதோ அந்த அந்த இலாகாவில் இந்தியரை நியமிக்கவே அரசாங்கம் எண்ணங்கொண்டிருப்பதாகப் பார்லிமெண்டில் சொல்லப்பட்டது.

"லீடர்"

## பள்ளிப்பிள்ளை ஜெட்லந்து!

"கவர்னர்களுக்கும், மந்திரிமார்களுக்கும் தீவிர அபிப்பிராய பேதம் ஏற்படும் பொழுது தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்யுமாறு மந்திரிகளைக் கவர்னர் வற்புறுத்துவது புத்திசாலித்தனமாயிராது. பார்லிமெண்டின் அந்தரங்க எண்ணமும் அதுவன்று" என்று லார்டு ஜெட்லந்து சொன்னார். அவர் மகாத்மா காந்தியின் திட்டத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. கஷ்டமான நிபந்தனைகளை ஏற்படுத்துவது மகாத்மாவின் நோக்கமன்று. இருதரப்பினருக்கும் அந்தரங்கத்தில் சிநேகமிருக்க வேண்டு மென்றே மகாத்மா சொல்கிறார். ஜெட்லந்து பள்ளிக்கூடத்துப் பிள்ளையைப்போலச் சொன்னதையே திரும்பத் திரும்ப ஒப்புவிக்கிறார். அவரது இனிய வசனங்களைக் கேட்கும் மனோ நிலைமையில் இப்பொழுது இந்தியா இல்லை. எது புத்திசாலித்தனமான நடவடிக்கை? எது அதற்கு மாறானது என்று அவரைக் கேட்க இப்பொழுது நேரமில்லை. இந்த மாதிரித் தேன் ஒழுகும்படி பேசுவதை அவர் தம் நாட்டு மக்களுக்கு ஒதுக்கி வைத்துக் கொள்ளட்டும்.

"அட்வான்ஸ்"

## மறந்து போய் விட்டாரே!

இந்தியா மந்திரியின் கடைசி அறிக்கையிலிருந்து அவர் மனம் சிறிது மாறியிருப்பதாகத் தெரிகிறது. காங்கரஸ் கேட்ட உறுதிமொழி சட்டவிரோதமானதென்று முதன் முதலில் அவரது அரசாங்கம் சொல்லிக் கொண்டிருந்தது. அந்த மாதிரி சட்டவிரோதமென்று புது அரசியலில் காணப்படவில்லையென்பதை அவர் இப்பொழுது ஒப்புக்கொள்ள நேர்ந்து விட்டது. காங்கரஸ் கேட்டதை ஒப்புக் கொள்வது புத்திசாலித்தனமாகாது என்பதும் பார்லிமெண்டின் அந்தரங்கத்துக்கு விரோதம் என்பதுமே அவரது ஆக்ஷேபம். ஆனால் உதவி இந்தியா மந்திரி இருக்கிறாரே! அவர் ஒரு விஷயத்தை மறந்து விட்டார். புத்திசாலித்தனம் என்பது அவருக்கும் அவரது சகாக்களுக்கும் மாத்திரமே சொந்தம் அன்று என்பதை அவர் அறவே மறந்து போனார்! ஒரு தேசத்தார் முழுமனதுடன் ஆதரிக்கும் கோரிக்கைக்கு இணங்குவதே இராஜதந்திரிக்கு லக்ஷணம். சமாதானத்தின் பொருட்டும் பரஸ்பர நல்லெண்ணத்தின் பொருட்டும் அக்கோரிக்கைக்கு இணங்கவேண்டுவது அவசியம். இவ்விஷயங்களை அவர் மறந்து போய் விட்டாரே!

—"பத்திரிகா"









## ஸ்டூடியோச் செய்திகள்

நாஷனல் மூவிடோன்:— "ராஜமோஹன்" என்பது இவர்கள் தயாரிக்கும் படம். பிரேம்ஸேத்ஞ என்பவர் டைரெக்டர். ஆறாயிரம் அடி படம் தயாராகி விட்டது. கே. பி. கேசவன், கே. கே. பெருமாள், என். எம். ராதாபாய் முதலியோர் இப்படத்தில் நடிக்கின்றனர். காளிரத்னம் ஹாஸ்ய நடிகர்.

யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்போரேஷன்:—இவர்களுடைய தமிழ்பேசும் படமாகிய "பாலயோகினி" யைத் தெலுங்கிலும் எடுக்க ஏற்பாடாகிக் கொண்டிருக்கின்றது. இப்படத்தில் பேபி சரோஜாவும், மிஸ். ராமதிலகமும் நடிப்பார்களாம். இப்படம் புதிதாகச் சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மோஷன்பிச்சர் புரொட்யூஸிங் கம்பெனியிலேயே எடுக்கப்படலாமெனவும் சொல்லப்படுகிறது.

ஜோதிபிலிம்ஸ்:— இவர்களுடைய "திருப்புகழ் அருணகிரிநாதர்" இப்பொழுது எடிடிங் ஆகிக்கொண்டிருக்கிறது. இப்படம் ஜூலைமாதம் வெளிவரக்கூடும்.

ஒலிம்பிக் பிச்சர்ஸ்.— இவர்களின் "மைனர் ராஜாமணி" என்ற படத்தின் ஷூட்டிங் சென்ற 11-ந் தேதி நேஷனல் மூவிடோன் ஸ்டூடியோவில் ஆரம்பமாயிற்று.

பிரீமியர் சினிடோன்:— இவர்களுடைய "கந்த லீலா" ஷூட்டிங் நடந்து கொண்டிருக்கிறது. "ஆண்டாள் திருக்கலியாணம்" ஷூட்டிங்கும் நடந்து கொண்டிருக்கிறது.

மதுரை மீனாக்ஷி டாக்கீஸ்:— இவர்களின் சமூகப்படமான "ராஜசேகரன்" சென்னை சவுண்டு ஸிடியில் தயாரிக்கப்பட்டு வருகிறது. கதையின் காலம் போக்கு உடை செட்டிங்ஸ் முதலியவைகள் ஏற்பாடாகியுள்ளன. இப்படத்தில் குதிரை சவாரிக் காட்சிகள் வருவதால் 7 நடிகர்களுக்குக் குதிரை சவாரிப் பயிற்சியளிக்கப்பட்டு வருகிறது. இதில் "மகாபாரத"த்தில் நடித்த ஸ்ரீமதி டி. வி. ஜனகம், "சந்திரசேன" வில் நடித்த ஸ்ரீமதி கனகம் ஆகியோர் நடிக்கின்றனர். இப்படத்தின் கதையுடன் ஒட்டியே ஸ்ரீமதி ராஜம் புஷ்பவனத்தின் சங்கீதக்கச்சேரியும் எடுக்கப்படும்.

சுந்தரம் சவுண்டுஸ்டூடியோ:— இவர்கள் ஒரு துண்டு காமிக் படம்பிடித்துக் கொண்டிருப்பதாகவும் இப்படம் இவர்களுடைய "பஸ்மாஸுர மோஹினி" என்றபடத்துடன் காண்பிக்கப்படுமெனவும் தெரிகிறது.

மாடர்ன் தியேட்டர்ஸ், சேலம்:— இவர்களுடைய "பத்ம ஜோதி"யின் ஷூட்டிங் முடிவடைந்து எடிடிங் ஆகிக் கொண்டிருக்கிறது. இந்த ஸ்டூடியோவிலேயே தேவி பிலிம்ஸாரின் "புரந்தரதாஸ்" தமிழ், கன்னடம் பேசும் படங்களின் ஷூட்டிங் நடந்துகொண்டிருப்பதாகவும், 3000 அடிக்குமேல் எடுக்கப்பட்டதாகவும் தெரிகிறது.

மயூரா பிலிம்ஸ்:— இவர்களுடைய "அருணகிரிநாதர்" கோலாப்பூர் ஷாலினி சினிடோனில் சுமார் 8000 அடிகள் வரை எடுக்கப்பட்டு விட்டதாகத் தெரிகிறது.

## மூளையில்லாக் குழந்தை

நியூயார்க் ஆஸ்பத்திரி ஒன்றில் ஒரு குழந்தை பிறந்தது. அதற்குப் பசி எடுப்பதே தெரிவதில்லை. சதா அக் குழந்தை அழுதுகொண்டே யிருந்தது: அக் குழந்தைக்கு உணர்ச்சி என்பதே கிடையாது. டாக்டர்கள் இதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். பிறந்த இருபத்தேழு நாட்களுக்குப்பின் குழந்தை இறந்து விட்டது. உயிர் போன சிறிது நேரத்துக்குப் பின்னர் அக்குழந்தை அறுத்துப் பரிசோதிக்கப்பட்டதாம். அச்சோதனையில் குழந்தைக்கு மூளையில்லையென்பது காணப்பட்டதாம். மூளையுள்ள விடத்தில் நீர் போன்ற வஸ்து காணப்பட்டதாம். இதுவரை இம்மாதிரியான குழந்தையை டாக்டர்கள் கண்டதில்லையாம்.

# கலம்பகம்

ஸி. ஆர். தாஸ்தினம் நாடெங்கும் அனுஷ்டிக்கப்பட்டது.

o o o

ஆந்திர நாட்டு தேசவாளர் மகாநாட்டைத் திரு. வி. இராமதாஸ் பந்துலு திறந்து வைத்தார்.

o o o

ஸ்ரீ வில்லிபுத்தூர் வட்டம் அரசியல் மகாநாடு தோழர் ஜீவானந்தம் தலைமையில் நடைபெற்றது.

o o o

மைசூர் மகாராஜாவின் 54-வது பிறந்ததினம் சென்ற சனிக்கிழமை கொண்டாடப்பட்டது.

o o o

திருச்சிக்கு அருகாமையிலுள்ள வயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்குக் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

o o o

நத்தம்பட்டி வட்டம் அரசியல் மகாநாடு அம்மாம்பட்டியில திரு. திரிகூடசுந்தரம் பிள்ளை தலைமையில் நடைபெற்றது.

o o o

வேங்கடகிரி மகாராஜா பெங்களூரில் இறந்து போனார். அவரது பிரேதம் வேங்கடகிரிக்குக் கொண்டு வரப்பட்டது.

o o o

மன்னார்குடி நகர சபைத் தேர்தலில் காங்கரஸ் தலையிட வேண்டுமென்று நகர காங்கரஸ் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

o o o

திருநெல்வேலி சுதேசிப் பொருட்காட்சி நகரசபை மைதானத்தில் திரு. அவிஞசிலிங்கம் செட்டியாரால் திறந்து வைக்கப்பட்டது.

o o o

கொத்தப்பட்டணத்தில் அதிகாரிகள் நடந்து கொண்ட விதத்தைக் கண்டித்துப் பண்டித ஜவஹர் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

o o o

வத்திராயிருப்பு கிராம அரசியல் மகாநாடு புதுப்பட்டி கிராமத்தில் நடைபெற்றது. வேலூர் குப்புசாமி முதலியார் தலைமை வகித்தார்.

o o o

டாக்டர் மூஞ்சேயின் பான்ஸ்லே இராணுவப் பள்ளிக்கூடம் நாஸிக்கில் டாக்டர் குர்த்கோடி சங்கராசாரியாரால் திறந்து வைக்கப்பட்டது.

o o o

கொத்தப்பட்டணம் வழக்கு சம்பந்தமாகப் பதினறு பேருக்கு ஆறு மாதக் கடுங்காவலும் பலதிறப்பட்ட அபராதங்களும் விதிக்கப்பட்டன.

o o o

பெங்களூர் விஞ்ஞான சங்கத்தின் டைரக்டர் பதவியிலிருந்து ஸர் ஸி. வி. ராமனை விலக்குவது பற்றி அரசாங்கம் இன்னும் ஒருவித முடிவுக்கும் வரவில்லையென்று தெரிகிறது.

o o o

ஆரும் ஜார்ஜ் மன்னரின் தலை அச்சிடப்பட்ட காலணு, அரையணு, முக்காலணு, ஓரணு ஸ்டாம்புகள் அடுத்த ஆகஸ்டு மாதம் முதல் விற்கப்படும். ரூபாய் ஸ்டாம்பு, மாதிரிக்கு அனுமதி கோரி இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

o o o

விசாகப்பட்டினம் நகர காங்கரஸ் கமிட்டி துறைமுகத் தொழிலாளர் சங்க நிர்வாகஸ்தர் தேர்தலில் தலையிடுவதென்று தீர்மானித்தது. அதை ஆக்ஷேபித்துச் சிலர் வெளியேறினர். தொழிலாளர் சங்கத்துக்குள் காங்கரஸ் தலையிடுவதேன்?



## ஸிம்லாவில் கூலிகள் படும்பாடு

### ரிக்ஷா வாலாக்களின் கஷ்டம்

### கஷ்டத்தை நீக்க வழியில்லையா?

பிரிட்டிஷ்காரரும் பரிதபிக்கிறாரே!

ஸிம்லாவில் கூலிகளும் ரிக்ஷாவாலாக்களும் படும்பாட்டைச் சித்தரித்து ஒருவர் 'மாஞ்செஸ்டர் கார்டிய'னில் எழுதியிருக்கிறார். அதன் சாரம் வருமாறு:—

ஸிம்லா வைபவம் ஆரம்பமானல் பணக்காரர்களுக்கெல்லாம் கொண்டாட்டம். ஏழைக் கூலிகளுக்குத் திண்டாட்டம். அப்பொழுது தான் கூலிகளிடமிருந்து கசக்கி வேலைவாங்கப்படுகிறது. உலகில் எங்கேயும் அதற்கு இணைகாண முடியாது. ஸிம்லாவில் மோட்டார் பிரயாணம் செய்வது ஆபத்து விளைக்கும். இராஜப் பிரதிநிதி தவிர மற்றவர்கள் மோட்டாரில் செல்ல மாட்டார்கள். அவர்கள் கால் நடையாகவோ குதிரை மீதோ ரிக்ஷாமீதோ செல்வார்கள்.

அந்த ரிக்ஷா இழுப்பவர்கள் இருக்கிறார்களே! அவர்கள் மிக நல்லவர்கள்; குழந்தையைப்போலக் கொஞ்சிப் பேசுவார்கள்; எளிய வாழ்க்கை நடத்துவார்கள். அவர்களுக்குத் தாங்கள் செய்யும் உத்தியோகத்தில் அபாரமான கௌரவம்! ஸிம்லாவில் அந்த ரிக்ஷாக்காரர்கள் மிக அவசியமானவர்களே. ஆனால் அவர்களது நிலையை அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கம் இதுவரை எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை.

சிறு குடிசைகளில் அந்த ரிக்ஷாக்காரர்கள் கட்டிப்போட்ட மூட்டை போன்று தூங்குகிறார்கள். ஒரு கனத்த மழை பெய்தால் அந்தக் குடிசையெல்லாம் பாழ்பட்டுப் போம்.

பாரந் தூக்கிச் செல்லும் கூலிகளைப் பராமரிக்கும் முறை இருக்கிறதே! அது சுத்த மோசம். கோடைகாலத்தில் தான் அந்தக் கோரக்காட்சியைப் பார்க்க வேண்டும். பகலில் குறிப்பிட்ட சில மணிகளில் சில ரஸ்தாக்களில் கூலிகள் பாரந் தூக்கிச் செல்லக்கூடாது. ஏனெனில் அவர்கள் போடும் சப்தம் குதிரைகளைப் பயமுறுத்தி விடுமாம்!

அந்தக் சாடு முரடான மலைப்பிரதேசத்தில் கூலிகள் 'ஓடுஓடு' என்று விரட்டப்படுகிறார்கள். சில சமயங்களில் அடித்துக்கூட விரட்டப்படுகிறார்கள். அந்தக் கோரக் காட்சியை மனிதனைப் பிறந்தவன் கண்டு சகிக்கமாட்டான்.

அந்தக் கூலிகளின் கஷ்டத்தை அரசாங்கம் சுலபமாகப் போக்கி விடலாம். ஆனால் அது என்ன செய்கிறது?

"ஆமாம்! கஷ்டத்தைப் போக்க வேண்டும். ஆனால் அது எங்களுக்குச் சம்பந்தமில்லை, ஸிம்லா முனிஸிபாலிடிக்கே சம்பந்தம்" என்று சொல்கிறது.

## இரண்டரை லக்ஷம் பவுன் தானம்

இந்தியாவுக்கும் பங்கு

மாஜி எட்வர்ட் மன்னர் (வின்ஸர் கோமகனார்) முடி துறந்தபோது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குஏற்பட்ட நெருக்கடியை மிகத் திறமையோடு நீக்கிய பெருமை பிரதம மந்திரியாக விருந்த திரு. பால்டுவினுக்கே உரியதாம். அதை வியந்து ஓர் அநாமதேயப் பிரபு, திரு. பால்டுவினிடம் இரண்டரை லக்ஷம் பவுனை ஒப்படைத் திருக்கிறார். அதைக் கொண்டு சாம்ராஜ்யத்தின் ஒற்றுமைக்கான வழிகளைத் தேடவேண்டு மென்பது பணம் கொடுத்தவரின் எண்ணம்.

இந்தியாவும் இதில் உரிய நன்மையைப் பெறவேண்டு மேன்பது அவர்தம் கோரிக்கையாம். அக் கோரிக்கையை நிறைவேற்றத் திரு. பால்டுவின் ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறார்.

## கான் சாகிபின் கண்மூடி நாடகம்

### ஹாஸ்டல் மாணவியிடம் அடாத பேச்சு

### பரீக்ஷை தேறச் சிபார்சு செய்வாராம்

#### இலவசச் சம்பளம் கிடைக்கும்

டாக்கா வைத்தியக் கல்லூரி பெண்கள் ஹாஸ்டல் உதவிசூப்பிரெண்டெண்டெண்டின் பெயர் கான்சாகிப் மஜூதின் கான். அவர் ஹாஸ்டல் பெண்களிடம் துராகிருதமாக நடந்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது. அது பற்றிய விசாரணையும் நடந்தது. கான்சாகிப் பதவியிலிருந்தும் நீக்கப்பட்டார். சுஸாம ராய் என்ற பெண்மணி இது காரணமாகவே பள்ளிக்கூடத்தை விட்டார். அவர் கூறுவது வருமாறு:—

#### 'பாஸ் மார்க் போடச் சொல்வேன்'

"நான் சரீர சாஸ்திரப் பரீக்ஷையில் தவறி விட்டேன். அதை யறிந்து கொண்டு கான்சாகிப் என்னைக் கூப்பிட்டனுப்பினர். நான் 'மேட்ர'னுடன் அவர் வீட்டுக்குச் சென்றேன். கான் சாகிப் என்னுடன் பேச ஆரம்பித்ததும் 'மேட்ரன்' என்னைத் தனியே விட்டுப் போய் விட்டார். நான் வைத்திய சாஸ்திரத்தில் தேறி விட்டதாக அவர் சொன்னர். சரீர சாஸ்திரம் தமது பாடமா யில்லாவிட்டாலும் அந்தப் பரீக்ஷாதிகாரியைக் கண்டு எனக்குப் பாஸ் மார்க்குப் போடச் சிபார்சு செய்வதாகக் கூறினர். அதற்குக் கைம்மாருக நான் ஒன்று செய்யவேண்டு மென்று சொன்னர்.

#### சந்தோஷமாயிருக்க வேண்டும்

"என்ன வேண்டும்? என்று நான் கேட்டேன். 'நீ மாதம் இரண்டொரு முறை என் வீட்டுக்கு வரவேண்டும். நாம் இருவரும் சிரித்துச் சந்தோஷமாயிருக்கவேண்டும். உபாத்தியாயர் மாணவர் என்ற பேதமே நம்மிருவருக்கும் இனி யிருக்கக் கூடாது' என்ருர்.

#### இலவசச்சம்பளம் கிடைக்கும்

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள். உபாத்தியாயர் என்று நான் உங்களை மதித்துவந்தேன். இவ்விதம் பேசுவது உங்களுக்கு அழகன்று" என்று நான் சொன்னேன். 'அதனுல் கவலையில்லை! நீ என்வீட்டுக்கு வருவதைச் சூப்பிரெண்டெண்டு அம்மாள் ஆக்ஷேபிக்கமாட்டார். உனக்கு இலவசச் சம்பளம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்கிறேன்' என்ருர்.

#### நான் டாக்டர்

"அதன் பின் என் அருகே வந்து 'எங்கே! நான் உன்னைத் தீண்டி அந்த இன்பத்தைப் பெறலாமா?' என்று கேட்டார். நான் சற்றுப்பின் வாங்கினேன். 'உனக்குப் பயமாயிருக்கிறதா? ஆரம்பத்தில் எந்தப் பெண்ணும் பயப்படத்தான் செய்வாள். நீ பயப்பட வேண்டாம் நான் டாக்டர் என்பது ஞாபகமிருக்கட்டும்' என்ருர் அவர்; அன்று நான் தப்பிக்கொண்டு வந்து விட்டேன். இவ்விதம் இரண்டுமூன்று முறை நடைபெறவே நான் கலாசாலையை விட்டுவந்து விட்டேன்."

---

இந்தியாவில் ஒவ்வொருவரும் ஒரு வருஷத்தில் சராசரி எட்டு காலன் பாலையே சாப்பிடுகிருர். ஆனுல் மற்ற நாடுகளிலோ ஒவ்வொருவரும் சராசரி 50 முதல் 80 காலன் வரையில் சாப்பிடுகிருர்.

---

"மைசூர் போட்டோபோன் ஸ்டுடியோ, பங்களூர்":—விக்டர் ஹியூகோ என்பவர் ஆங்கிலத்தில் 'லே மிஸரபிள்ஸ்' என்று ஒரு கதை எழுதியிருக்கிருர். அக்கதையைத் தழுவி 'ஜெயபாரதி' என்ற படத்தை இந்தக் கம்பெனியார் எடுக்கப்போகின்றனர் என்று தெரிகிறது.

## குளக்கரைப் பேச்சு

சுமார் இரண்டு தினங்களுக்கு முன்பு ஒரு நாள் மாலை இராமஸ்வாமி சாஸ்திரியார் உள்ளூர்க் கணக்கப்பிள்ளை முதலியார் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். அப்பொழுது உபாத்தியாயர் சுப்புராயர் வந்தார்.

#### குரங்கு தூக்குப்போட்டுக்கொண்டது

"என் ஐயா! சாஸ்திரியாரே! ஒரு ருசிகரமான சம்பவம் கேட்டீரா. ஒரே ஒரு ரயில்வே ஸ்டேஷன். அந்த ஸ்டேஷனிலே சில குரங்குகள் குடும்ப சகிதம் குடியிருந்தன. தென்னுட்டில் திருவெறும்பூர் ஸ்டேஷனைப்போல வடக்கே ஒரு ஸ்டேஷன். அந்த ஸ்டேஷன் கடிகாரத்தைக் குரங்குகள் பரிசைஷபார்க்க ஆரம்பித்தன; நாளைக்கு ஒரு தினுசாக முள்ளைமாற்றி வைத்தன. நமது முனிஸிபாலிடி கடிகாரங்கள் சில இருக்கின்றன. அந்த விசித்திரமான கடிகாரங்களைப்போல இல்லை இந்த ரயில்வே கடிகாரம். இது மின்சார விசையால் ஓடுவது. ஆகவே தினமும் குரங்குகள் கடிகாரத்தைப்பழுது பார்க்க ஆரம்பித்தும் பொழுது மின்சாரத்தால் இழுக்கப்பட்டு மாண்டுவந்தன. கடைசியில் இவ்விஷயம் கண்டுபிடிக்கப்பட்டது. இது தான் இப்படி. இன்னொரு விஷயம் சொல்கிறேன். ஒரே ஒரு கப்பலில் இருந்த ஆண் குரங்குக்கும் பெண் குரங்குக்கும் சண்டை வந்து விட்டது. ஆண் குரங்குக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு விட்டது. அதனுல் அந்த ஆண் குரங்கு தூக்குப்போட்டுக் கொண்டு செத்துப்போயிற்று. பெண் குரங்கு 'ஐயோ! நாம் விதவையானேமே' என்று அழுததாகத் தெரியவில்லை."

#### ரெட்டி ஜோஸ்யம்

இவ்விதம் சுப்புராயர் சொல்லிக்கொண்டிருந்த பொழுதே சாஸ்திரியார் பேச ஆரம்பித்தார்:—

"உபாத்தியாயரே! ஒரு விஷயம் கேளுங்கள். நமது ரெட்டியார் இருக்கிருரே! அவர்தான் ஐயா! ஸர் கூர்மா வேங்கட ரெட்டி நாயுடுகாரு. அவர் சில தினங்களுக்கு முன்பு வக்கீல்களுடன் கலந்து ஆலோசிப்பதாகச் சொல்லப்பட்டது. கவர்னர் சட்ட சபையைக் கூட்டு முன்பே தம்மைத் தள்ளிவிட வழியுண்டா என்று கேட்டதாகக் கேள்வி. அவையாவும் 'அண்டப் புளுகு' என்று ரெட்டியார் விளக்கினர். அதற்குப் பிறகு ஒரு விசேஷ செய்தி வெளியாயிற்று. ரெட்டியார் தமது கையை ரேகை சாஸ்திரி ஒருவரிடம் காண்பித்தாராம்! பலே! பேஷ்! ரேகை சாஸ்திரிகளே! இதோ உங்களைத் தேடி வந்துவிட்டது யோகம்! ரெட்டியாரிடம் செல்லுங்கள்; 'அல்பாயசு மந்திரி சபை' 'தீர்க்காயசா' யிருக்குமென்று சொல்லுங்கள்; கிடைத்ததைப் பெற்றுக்கொண்டு செல்லுங்கள். இனிமேல் ரெட்டி ஜோஸ்யர், குட்டி ஜோஸ்யர், கெட்டி ஜோஸ்யர், மட்டி ஜோஸ்யர், வெட்டி ஜோஸ்யர் முதலிய ஜோஸ்யர்கள் கிளம்பலாம்!"

#### கோழிமுட்டை O

முதலியார் சொல்கிருர்:—

"பச்சோந்தி ஜம்னுதாஸ் மேதா இருக்கிருரே! அவரது யோசனையின் பேரில் பம்பாயில் பொக்கிஷ மந்திரிகள் எல்லாரும் கூடினர்கள்; பேசினர்கள். நமது மாகாணத்திலே பொக்கிஷமந்திரியாயிருப்பவர் கனம் ஏ. டி. பன்னீர்செல்வம் அவர்கள் அல்லவா? அவர் இந்த மகாநாட்டால் பயன் ஒன்றும் விளையாதென்று சொல்லிக் கலந்துகொள்ள மறுத்துவிட்டார். வங்காளத்துப் பொக்கிஷ மந்திரியும் வரவில்லை. மற்றப் பொக்கிஷ மந்திரிகள் கூடிப் பேசினர்கள். 'விளக்கெண்ணெய் சேதமாயிற்றேயொழிய பிள்ளை பிழைக்கிற வழியில்லை.' பொக்கிஷ மந்திரிகள்பேசி என்ன முடிவுகட்டினர்கள் தெரியுமா? கோழி முட்டை! O"

#### இராஜப்பிரதிநிதி விடப்போகிருர்!

சாஸ்திரியார் சொல்கிருர்:—

"இந்த அதிசயத்தைக் கேளுங்கள். இராஜப்பிரதிநிதி விடப் போகிருர் விடப்போகிருர் என்று தெருவில் எல்லாரும் பேசிக்கொண்டனர். என்னத்தை ஐயா விடப்போகிருர்? காளை மாட்டையா விடப்போகிருர்! வேலையையா விடப்போகிருர்! என்று நான் கேட்டேன். இராஜப்பிரதிநிதி மௌன விரதத்தை விடப்போகிருர்! அறிக்கை விடப்போகிருர்! மங்கள வாரத்தில் விடப்போகிருர் என்று கேள்விப்பட்டேன். விட்டாரா! விட்டாரா! என்று கவனித்துக் கொண்டேயிருந்தேன். கடைசியில் இராஜப்பிரதிநிதி விட்டார் ஐயா அறிக்கை! அந்த அறிக்கைக்கு முன்பு அதாவது திங்கட்கிழமை இரவு ரேடியோ மூலம் குட்டிப்பிரசங்கம் ஒன்றும் செய்தார். ஸ்வாமி! அந்த அறிக்கையை நான் இதோடு இருபது தரம் திருப்பித் திருப்பிப் படித்தேன். புதிதாக அதில் ஒன்றும் எனக்குத் தென்படவேயில்லை. இராஜ விஸ்வாஸிகள் அந்த அறிக்கை வெளிவந்த பத்திரிகைகளுத் தூபதீபம் காட்டிப் பூஜை நைவேத்யம் கூடச்செய்தார்கள் என்று ஓர் அநாமதேயச்செய்தி கிடைத்தது. அந்த அறிக்கையின் வார்த்தைக் கோவையை நான் என்னவென்று புகழ்வேன்! ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனும் முடியாதே. ஒரு நாப்படைத்த நான் எப்படிப்புகழ்வேன்! அந்த அறிக்கை மிகவும் நீளமாயிருந்தது; நன்ருயிருந்தது; காதுக்கு இனிமையா யிருந்தது; தேனும், ஜீனியும், பழமும் கலந்த பஞ்சாமிர்தம் போலிருந்தது; படிக்கப் படிக்க ருசியாயிருந்தது! ஆஹா! இந்த இராஜப்பிரதிநிதிக்கு ஏழை இந்தியரிடம் எவ்வளவு கருணை! இந்தியர் கிடக்கட்டும். கால்நடைகளிடமும் கிராமவாசிகளிடமும் அவருக்கு எவ்வளவு அன்பு! அதைக்கூட அந்த அறிக்கையில் காட்டி விட்டார்! பேஷ்! இராஜப்பிரதிநிதியின் அறிக்கை கல் மனத்தையும் கரைத்துவிடும். அவருக்கு இந்திய மக்களுடன் இணங்கிச் சமாதானமாகப் போக வேண்டுமென்ற ஆசை யிருக்கிறது என்பதை அதில் காட்டிக் கொண்டுள்ளார். இந்த மூன்றுமாத காலமாக இராஜப் பிரதிநிதி மௌன விரதம் பூண்டு இந்த அறிக்கையைத் தயாரித்திருப்பாரென்று தோன்றுகிறது! 'மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்' அல்லவா! ஆனுல் இவ்வளவு தூரம் சிரமப்பட்டு இராஜப் பிரதிநிதி வெளியிட்ட அறிக்கையில் என்னடா சாரம் இருக்கிறது என்று பார்க்கப்போனுல் அது தான் இல்லை. ஏமிலேது. சாரத்தை யார் இப்பொழுது கேட்கிருர்! சம்ஸாரத்தைத்தான் கேட்கிருர்!

#### 'ஒயிட் ஹாலில்' ஒத்திகை—கிராமபோன்

"இந்த சாரமற்ற அறிக்கையை வெளியிடுவதற்கு முன்னுல் 'ஒயிட் ஹாலில் இராஜப்பிரதி ஒத்திகை' நடத்திக் காண்பித்திருப்பார் என்று அந்தரங்கத் தந்தி அறிவிக்கிறது. இல்லாம லிருக்குமா! இராஜப் பிரதிநிதியென்ன! பார்லிமெண்டு தேவதைகள் ஆட்டி வைக்கும் பாவை தானே! 'ஒயிட் ஹாலின் கிராமபோன்'!

"இன்னுங் கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல வேண்டுமா! இவ்வளவு நாள் எல்லாரும் பேசியதை இராஜப்பிரதிநிதி கோர்த்துச் சொன்னர்."

#### யானை குட்டிபோட்டது

சுப்புராயர் பின் வருமாறு சொல்கிருர்:—

"யானை குட்டி போடப் போகிறது குட்டி போடப் போகிறது என்று ஒருவன் சொன்னனும். முடிவில் யானை குட்டியும் போடவில்லை ஒன்றுமில்லை; லத்தைதான் போட்டது. அப்படித்தான் இருக்கிறது இராஜப்பிரதிநிதியின் அறிக்கையும். நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும்பொழுது 'சிலந்தியும், பூச்சியும்' என்று ஒரு பாட்டுப் படித்திருக்கிறேன். 'கண்ணே வா! கற்பகமே வா! கண்ணுடி யுண்டு; மெத்தை யுண்டு; மஞ்சம் உண்டு; சயன அறையுண்டு; ஸ்நான அறையுண்டு' என்று சிலந்தி, பூச்சியைக் கூப்பிட்டதாம். அதே மாதிரிதான் தற்கால அரசியல் நிலைமை!"

#### திருப்பதிக்கு ரயில்

சாஸ்திரியார் சொல்கிருர்:—

"இந்த ஜெர்மானியர்கள் இருக்கிருர்களே! அவர்களில் ஒரு கோஷ்டியார் நமது ஹிமாலயத்தின்மீது ஏறினர்கள். நம்முடைய ஹிமோத்கிரிபர்வதம் தெய்விக சக்தி வாய்ந்தது, அதன்மீது அவர்கள் ஏறலாமா? அதனுல்தான் பதினுறு பேர் மாண்டனர். அதேமாதிரி பாருங்கள். இப்பொழுது திருப்பதி மலைக்கு ரயில் போடப் போகிருர்களாம். திருப்பதி மலையில் ரயில் போடவே கூடாது. மலைமீது ஏறி இறங்குவதால் தீராத வியாதி யெல்லாம் தீர்த்து வைக்கிருன் கோவிந்தன். ரயில் போட்டால் திருப்பதியின்மகத்துவம் போய்விடும். திருப்பதிக்கு ரயில் போடவே கூடாது."

இவ்விதம் பேசிக் கொண்டே எல்லாரும் எழுந்து சென்றனர்.

—கமலம்

## மூளையில் புத்தி இருப்பதெங்கே?

### அமெரிக்கர் ஆராய்கிருர்

மூளை வேறு; புத்தி வேறும். மூளையில் புத்தி எங்கே இருக்கிறது? அமெரிக்காவில் பிட்ஸ்பார்க் என்றவிடத்தில் மேற்கண்ட விஷயமாகத் தர்க்கம் நடந்தது.

மூளை, வலதுபாக மென்றும், இடது பாகமென்றும் இருபகுதியா யிருக்கிறது. அப்பகுதிகள் மேற்புறம் தவிட்டு நிறமாயும் உள்புறம் வெள்ளையாயுமிருக்கின்றன. தவிட்டு நிறமாயுள்ள பாகம் இருக்கிறதே அதில்தான் எண்ணங்களும், யோசனைகளும் தோன்றுகின்றனவாம். அந்த வெள்ளையான பாகம் உணர்ச்சிகளைத் தவிட்டு நிறமான பாகத்துக்குத் தெரிவித்து அது சொல்லும் உத்தரவினைத் தேகத்தின் பல பாகங்களுக்கும் அனுப்புகிறது. இந்தக்கொள்கை சமீபகாலம் வரை நம்பப்பட்டு வந்தது.

இப்பொழுது பிட்ஸ்பர்க்கில் ஒரு பெண்மணி யிருக்கிருர். அவருக்கு மூளையின் வலது பகுதியேயில்லை. மேற்சொன்ன கொள்கை உண்மையாயிருந்தால் அப்பெண்மணிக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டுமே. ஆனுல் அப்பெண்மணிக்கு ஒன்றுமில்லை.

ஸெயின்ட் லூயி நகரத்தைச்சேர்ந்த டாக்டர் லீலந்து என்பவர் இதுபற்றி ஆராய்ந்தார். மூளையின் அடியில் ஒரு சிறு பிரதேசத்தில் புத்தியின் மூளையிருப்பதாக அவர் கண்டுபிடித்தார். வலதுகை வாகுடையவர்களுக்கு அந்த மூளை மூளையின் இடது பாகத்திலும் இடதுகை வாகுடையவர்களுக்கு வலது பாகத்திலும் இருப்பதாக அவர் கண்டு பிடித்தார். மூளைக்குழப்பம், கோளாறு முதலியவை ஏற்படுவதற்கு அந்த மூளையுள்ள பிரதேசம் பாதிக்கப்படுதலே காரணமென்று அவர் கூறினர்.

---

ஹாலந்தில் மியூஸ் என்று ஒரு நதி யிருக்கிறது. அந்த நதிக்கு அடியில் குறுக்கே மோட்டார், சைகிள், மனிதர் போக்கு வரவுக்கென்று ஒரு பாதை போடப்பட் டிருக்கிறது. அதற்கான செலவு 75 லக்ஷம் டாலர்.



## மணித்திரள்

சாதாரணமாக ஒரு முத்துச் சிப்பியின் ஆயுள் பத்து வருஷம்.

* * *

அன்ன பக்ஷிகள் இருநூறு வருஷம் வாழ்வதாகச் சொல்லப்படுகிறது.

* * *

சாதாரணமாக ஒரு காளை மாட்டின் நாக்கு நாலு அல்லது ஐந்து ராத்தல் நிறையிருக்கும்.

* * *

பிரிட்டனில் வருஷந்தோறும் ஆருயிரத்து ஐந்நூறு கோடி சிகரெட்டுக்கள் செலவாகின்றனவாம்.

* * *

நெற்பயிர்போன்ற பயிர்களை அழிக்கும் பூச்சிகளை அமெரிக்கர் மின்சாரத்தால் கொன்று விடுகிருர்.

* * *

இன்னும் ஏழு லக்ஷம் வருஷங்களுக்குப் பிறகு கிறிஸ்துமஸ் பண்டிகை கோடை காலத்தில் வருமாம்.

* * *

பிரிட்டனில் பிரதி வருஷமும் நாற்பதாயிரம் பெண்கள் காணுமற் போவதாகப் புகார் செய்யப்படுகிறதாம்.

* * *

ஓர் இந்தியனுடைய சராசரி வரும்படி ஒரு பிரிட்டிஷாருடைய வரும்படியில் பன்னிரண்டில் ஒரு பாகமே.

* * *

1944-ம் வருஷத்துக்குள் அமெரிக்காவுக்கு ஒரு பெண் தலைவி வருவாரென்று ஒருவர் ஜோஸ்யம் கூறுகிருர்.

* * *

சூரியனது உஷ்ணத்தினுல் ஒவ்வொரு நிமிஷமும் முப்பத்தேழாயிரங் கோடி டன் நிறையுள்ள தண்ணீர் ஆவியாக மாறுகிறது.

* * *

கிரேட் பிரிட்டனில் அளிக்கப்படும் மோட்டார் லைசென்ஸ்களில் நூற்றுக்குப் பன்னிரண்டுவிதம் பெண்களுக்கு அளிக்கப்படுகின்றன.

* * *

ஸ்பெயின் தேசத்தில் போர்தொடங்கியது முதல் நாளது வரையில் 16,750 பாதிரிகளும் 11 பிஷப்புகளும் கொலையுண்டிருக்கிருர்கள்.

* * *

தென்னுப்பிரிக்காவில் ஒரு வகைக் கழுகுகள் வாழ்கின்றன. அவை பெரிய பெரிய குரங்குகளைக்கூட அடித்துச் சாப்பிட்டு விடுகின்றன.

* * *

துருக்கி தேசத்தில் மார்டிரோஸ்டாடோரியான் என்பவருக்கு 108-வது வயதில் மூன்ருவது முறையாகப் பற்கள் முளைத்திருக்கின்றன.

* * *

இந்தியாவில் ஒரு மனிதன் சராசரி வருஷத்தில் 12 பவுன் உப்பே ஆகாரத்தோடு கலந்து உண்கிருன். ஜெயிலிலேயே சராசரி 17 பவுன் தரப்படுகிறது.

* * *

எல்லாப் பொருள்களையும் கரைத்துவிடும்படியான ஒருபுதிய திராவகத்தை அறிஞர் கண்டுபிடித் திருக்கிருர். அதன் பெயர் 'ஸெலீனியம் ஆக்ஸிகுளோரைட்.'

* * *

இரங்கூனில் 18 வயதுள்ள சென்னத் பிண்டோ என்ற வாலிபன் தனது பற்களால் 160 ராத்தல் (சுமார் 6 மணங்கு) எடையுள்ள சாமானைத் தூக்குகிருனும்.

* * *

நியூயார்க் நகரத்தில் முள்ளே யில்லாத ரோஜாச் செடியை ஒருவர் கண்டார். அவ்வொரு செடியைக் கொண்டு அவர் ஒரு பெரிய நந்தவனத்தை உண்டாக்கிவிட்டார்.

* * *

தற்போது பிரிட்டன் பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்குப் பால் தரப்படுகிறது. அதனுல் முன்னைவிட இப்பொழுது சிறுவர் திடகாத்திரராகவும் உயரமாகவும் வளர்கிருராம்.

## பொது அறிவு

#### 'ட்ராம்' பெயர் எப்படி வந்தது?

இக்காலத்து 'ட்ராம்' வண்டியைப் பற்றி அறியாதார் இலர். அப்படிப் பட்ட வண்டிக்கு அப்பெயர் எப்படி வந்தது? தண்டவாளங்கள் மீது முன்னுளில் வண்டிகள் ஓடவில்லை. அவுட்ராம் என்ற ஒருவர் மேடுபள்ளமில்லாமல் கெட்டியாயுள்ள தரைமீது வண்டிகள் ஓடினுல் ஒருவிதக் கஷ்டமுமில்லாமல் சுலபமாக ஓடும் என்று கூறினர். அதனுல் தண்டவாளங்கள் போடப்பட்டு அவற்றின்மீது வண்டிகள் ஓடின. அத்தண்டவாளப் பாதைக்கு 'அவுட்ராம்வே' என்ற பெயர் வழங்கலாயிற்று. பின்னர் அப்பதம் மாருவி 'ட்ராம்வே' என்று அழைக்கப்படுகிறது. இப்போது ட்ராம் என்ற பதம் எப்படி வந்ததென்று தெரிகிறதா?

* * *

#### நான்கு கண்ணுள்ள மீன்

கடலில் ஓர் அபூர்வமான மீன் வசிக்கின்றது. அம்மீனுக்கு நான்கு கண்கள் இருக்கின்றன. நான்கு கண்கள் என்ற போதே சந்தேகப் படவேண்டாம். இரண்டு கண்கள் தான். ஒவ்வொரு கண்ணின் மத்தியில் ஒவ்வொரு கோடு இருக்கிறது. அக்கோடு கண்ணை இரண்டாகப் பிரித்து விடுகிறது. அப்போது இரண்டு கண்களில் நான்கு கண்கள் இருக்கின்றன. அம்மீன் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்துக்குச் செல்லும்போது பாதிகண் நீர்மட்டத்துக்கு மேல் இருக்கிறதாம்; பாதிகண் நீர்மட்டத்துக்குக் கீழேயிருக்கிறதாம். மேலே உள்ளகண் நீர்மட்டத்துக்கு மேல் இருக்கும் பொருள்களையும் கீழேயுள்ள கண் நீர்மட்டத்துக்குக் கீழேயுள்ள பொருள்களையும் காண்கின்றன.

* * *

#### கைகால் ஓய்ச்சல் உண்டாவதேன்?

சிலருக்கு அடிக்கடி கைகால் ஓய்ச்சல் உண்டாகிறது. அக்காலத்து ஓய்ச்சல் உண்டான பாகங்களுக்குத் தூக்கம் வந்துவிட்டதென்றே கூறலாம். இவ்வோய்ச்சலுக்குக் காரணம் என்ன? நமது தேகத்தில் இரத்த ஓட்டம் சதா ஒரே நிலைமையில் இருப்பது இல்லை. சில சமயங்கள் இரத்தஓட்டம் குறைகிறது. அக்காலத்துச் சில பாகங்களுக்கு இரத்தம் செல்வதில்லை. இரத்த ஓட்டத்துக்கேற்ப நரம்புகள் வேலை செய்கின்றன. அதனுல் இரத்த ஓட்டம் குறைந்தவிடத்தில் நரம்புகளின் வேலை குறைகிறது. எனவே ஓய்ச்சல் உண்டாகிறது. இரத்த ஓட்டத்தை அதிகப்படுத்தினுல் கைகால் ஓய்ச்சல் உண்டாகாது. உடலை ஒரே பக்கமாக அதிக நேரம் வைத்துக்கொண்டிருப்பதால் உயரமாக இருக்கும் பாகத்தில் இரத்த ஓட்டம் குறைகிறது. இக்குறையைப் போக்க வேண்டுவதே நமது கடன்.

* * *

#### மின்சார நகர்

மின்சாரமே நகரா? அல்லது நகரே மின்சாரமா? என்று சந்தேகிக்கும்படி ஓர் ஊர் இருக்கிறது. அது கொலம்பியா நதிக்கு அருகிலுள்ள மேஸன் நகரம். அந்நகரத்தில் பெரிய அணை ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அவ்வணையின் பயனுக்குச் சுமார் நானூறு குடும்பங்கள் அந்நகரத்தில் இருக்கின்றன. அங்கு மின்சாரம் எடுக்கப்படுகிறதாம். அப்படி எடுக்கப்படும். மின்சாரம் மிகக் குறைந்த விலைக்கு அளிக்கப்படுகிறது. அதனுல் நகரமாந்தர் அனைவரும் சமையல் முதல் எல்லா வேலைகளுக்கும் மின்சாரத்தையே உபயோகிக்கின்றனராம். அந்நகரில் நெருப்புப் புகையைக் காண்டல் அரிது.

இரவில் விளக்குகளின் எண்ணிக்கையைக் கேட்கவேண்டியதில்லை. பல மைல் தூரம் தெரியும்படியாக அந்நகர் இரவில் வெகு பிரகாசமாகத் தோன்றுகிறது. அது குளிர்ந்த பிரதேசத்திலுள்ள ஒரு நகரம். சில சமயங்களில் எங்கும் பனிக்கட்டியே காணப்படும். அக்காலத்திலும் அறைகளை உஷ்ணப்படுத்த மின்சாரமே உபயோகிக்கப்படுகிறது.

* * *

#### ஒற்றைச் சக்கர ரயில் வண்டி

ரயில் வண்டி ஒற்றைத் தண்டவாளத்தில் ஓடுவதைக் கேட்டிருக்கிறீர்களா? நமது தேசத்தில், இவ்வித ரயில் இல்லை. வெளிநாடுகளில் இப்படிப்பட்ட ரயில் வண்டிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. 'ஜிராஸ்கோப்' என்ற ஒருவித கருவியைப் பார்த்திருக்கிறீர்களா. அஃது இக்காலத்து ஜப்பானுல் சிறுவர்விளையாட்டுக் கருவியாகச் செய்து தரப்படுகிறது. அதிலுள்ள சக்கரத்துக்கு எவ்வித உறுதியான பிடிப்புமில்லாமல் இருப்பதால் வேகமாகச் சுற்றும்போது ஒரே திசையைநோக்கி அக்கருவியே நிற்கிறது. இதற்குக்காரணம் பூமியின் ஆகர்ஷண சக்தியே. அக்கருவியின் கருத்தை மனத்தில் வைத்தே ஒற்றைச்சக்கர ரயில்வண்டிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. ரயில் பாதையிலும் ஒரே ஒரு தண்டவாளம் மட்டும் இருக்கும். இதைக் கண்டு பிடித்தவர் லூயிபிரன்னன் என்ற அயர்லந்து தேசத்தவர். அஃது இருபதாம் நூற்ருண்டின் முதலிலேயே கண்டுபிடிக்கப்பட்டது. கண்டு பிடித்தவர் 1934-ம் ஆண்டில் இறந்துவிட்டார்.

* * *

#### வழுக்கைத் தலைக்கு வாழ்வு

சிலர் தினந்தோறும் தலைமயிரைச் சோப்பு போட்டு நன்ருகச் சுத்தி செய்தும் பின்னர் கூந்தல் தைலங்கள் பலவற்றைத் தடவியும் வருகிருர். அவர்கள் தலையில் மயிர் நன்ருக வளர்வதில்லை. வேறுசிலர் தலையிலோ மயிர் கருமையாகவும் அடர்த்தியாகவும் வளர்கிறது. சிலருடைய இக்குறையைப் போக்கத் தற்போது ஒருபுதியமின்சார முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதனுல் வழுக்கைத்தலையருக்கெல்லாம் பெரிய வாழ்வு வந்துவிட்டதென்றே கூறலாம். அவர்களெல்லாரும் மயிரைப் பற்றிக் கஷ்டப்படவேண்டுவது இல்லையாம். உயிரேயில்லாத உருளை மீதும் நேர்த்தியான மயிரை வளக்கக் கூடுமென்று இம்முறையைக் கண்டு பிடித்த சின்சினுத்தி நகரைச் சேர்ந்த டாக்டர் ஆண்ட்ரூ சியூடோ கூறுகிருர். இதுவரையில் தலையில் மயிரேயில்லாத பல அமெரிக்கர் இம்முறையால் அழகான கூந்தலைப் பெற்றிருக்கிருராம்.

* * *

#### மாப்பிள்ளைச் சந்தை

இதுவரையில் நீங்கள் மாட்டுச் சந்தை, வெற்றிலைச்சந்தை, காய்கறிச் சந்தை முதலியவைகளைப் பற்றிக் கேட்டிருப்பீர்கள். ஆனுல் மாப்பிள்ளைச் சந்தையைப் பற்றிக் கேட்டிருக்கிறீர்களா? கேட்டிருக்கமாட்டீர்கள். ஆனுல் மௌரன் என்ற நகரத்துக்குச் சென்ருல் இவ்வித சந்தையைப்பற்றிக் கேள்விப்படலாம். அங்கு ஒவ்வொரு வருஷமும் ஜூன் மாதம் 7-ம் தேதி மாப்பிள்ளைச் சந்தை ஒன்று நடைபெறுகிறது. அச்சந்தைக்கு வெளி ஊர்களிலிருந்து பலர் வேடிக்கை பார்க்க வருகின்றனர். மணத்தை விரும்பும் வாலிபர்களெல்லாரும் அழகிய உடை தரித்து நிற்கின்றனர். அவ்விடத்துக்கு மணப்பெண்களும் வருகிருர்கள். எந்த மணப்பெண்ணுக்கு எந்த மாப்பிள்ளையின்பேரில் நாட்டம் செல்கிறதோ அவன் கையைப் பிடித்துக்கொள்கிருள். பின்னர் ஒரு விருந்து நடைபெறுகிறது. அவ்விருந்தின் செலவையெல்லாம் மணப்பெண்ணே செய்கிருள். இரவில் ஒரு நாட்டியம் நடக்கும். அப்போது பலர் முன்னிலையில் எப்பெண் எப்பிள்ளையைக் கணவனுக ஏற்றுக் கொண்டாளென்பது பலர் முன்னிலையில் கூறப்படுகிறது.

## உதிர்ந்த மலர்கள்

#### பணமும் தோலும்

என்நாட்டு மக்கள் வெள்ளைத்தோலுடையவர்; கறுப்பு மனதுடையவர். நீங்களோ கறுப்பு மனமும் வெள்ளைத் தோலும் உடையவர்கள்.

—பிரேஸ் கார்டில்.

* * *

#### தீண்டாமைக் கறை

தீண்டத்தகாதார் என்ற மனப்பான்மையை ஒழியுங்கள். உங்கள் சகோதரருடன் உங்களுக்கு அளிக்கப்படவேண்டிய சமத்துவ உரிமையை ஊர்ஜிதம் செய்து கொள்ளுங்கள். அந்த விதமாகவே தீண்டாமையை ஒழிக்க முடியும். இந்தக்கறையானது இப்பொழுது ஹிந்து சமூகத்திலிருந்து அழிந்து கொண்டிருக்கிறது. மகாத்மா காந்தி நமக்கு விழிப்பூட்டினர். அவர் வாழ்க!

—எம். வி. ராஜா.

* * *

#### முதலாளித்துவ ஆசை

உலகில் ஓரிடத்தில் குபேரபட்டணத்தைப் போலச்செல்வம் இருக்கிறது. மற்ருேரிடத்தில் குசேலர் வீடு போல் தாரித்திரம் தாண்டவமாடுகிறது. அமெரிக்காவில் கப்பல் கப்பலாகக் கோதுமை மூட்டைகள் எரிக்கப்படுகின்றன; கப்பல் கப்பலாகக் காப்பிக் கொட்டை கடலில் கொட்டப்படுகிறது இருந்தும் தேசத்தில் வேலையில்லாத் திண்டாட்டமும் பசியும் தாண்டவமாடுகின்றன. முதலாளித்துவ ஜனநாயகம் கபடமானது. தேசத்தில் அமைதி நிலவவேண்டுமானுல் முதலாளித்துவ ஆசை ஒழிய வேண்டும்.

—சௌம்யேந்திரநாத் தாகூர்.

* * *

#### சமதர்மம் சொல்வதென்ன?

ஒவ்வொருவனுக்கும் ஒரு நாளைக்கு மூன்று வேளைச்சாப்பாடு வேண்டும்; ஆறுஜோடி உடை ஒவ்வொரு வருஷத்துக்கும் வேண்டும்; வசிப்பதற்குச் சிறிய வீடு ஒன்று தேவை; இலவசக் கல்வியும், வாழ்க்கை உரிமைகளும் அவசியம்; வேலையில்லாதார் இன்ஷியூரன்ஸ், வயோதிகப்பென்ஷன், வைத்திய சிகித்சை முதலியன அளிக்கப்பட வேண்டும். இவ்வித நன்மைகள் செய்யப்பட்டால் தனிப்பட்ட சொத்துரிமை எதற்கு? சமதர்மம் இதைத்தான் சொல்கிறது. சமதர்மத்தைக் கண்டு படித்தவரும் பாமரரும் பயப்படுகிருர். ஜமீந்தாரர்கள் பயப்படவேண்டாம். காங்கரஸ் அஹிம்ஸையை மேற்கொண்டுள்ளது. அதனுல் புரட்சி ஏற்படாது. ஜமீந்தாரர்களுக்கு வேண்டிய வசதியளியாமல் அரசாங்கம் அவர்களது நிலபுலன்களைப் பிடுங்கிக்கொள்ளாது.

—வி. வி. கிரி.

---

திமிங்கலத்தின் நாக்கிலிருந்து ஒரு டன் எண்ணெய் எடுக்கப்படுகிறது.

* * *

அயர்லாந்து ஸ்வீப்ஸ்டேக் பந்தயத்தில் முப்பதாயிரம் பவுன் ஜயித்த ஒரு தொழிலாளி அந்தப் பணத்தை இரண்டரை வருஷங்களுக்குள் குடியில் செலவழித்து அதிலேயே இறந்துபோனுன்.

* * *

தேனில் சுண்ணும்பு, இரும்பு, பாஸ்பேட் போன்ற பல உலோகப்பொருள்கள் இருக்கின்றனவாம். ஆதலின் தினந்தோறும் தேனை உணவோடு கலந்துஉண்டால் எல்லாரும் சாண்டோ ராமமூர்த்தி போலாகி விடலாமாம்.

* * *

இங்கிலாந்து ஜனத்தொகையில் பத்தில் ஒரு பாகத்தவர் தேசத்திலுள்ள மொத்த சொத்தில் பத்தில் ஒன்பது பாகத்துக்கு உடையவராக இருக்கிருர். அமெரிக்காவிலோ ஜனத்தொகையில் நூற்றுக்கு ஒரு பாகத்தவர் மொத்த சொத்தில் நூற்றுக்கு நாற்பத்தெட்டு பாகத்தை வைத்துக் கொண்டிருக்கிருர்

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1937௵ ஜூன்மூ 25௳

## பழம்பாடமே ஆனால் விளக்கம்

காந்தியடிகள் கேட்ட உறுதி மொழியைப் பற்றிப் பலதிறக் கருத்துக்கள் வெளிவந்தன. கவர்னர்களும், இந்தியா மந்திரியும் தங்கள் தங்கள் கருத்தை வெளியிட்டார்கள். இராஜப்பிரதிநிதிமட்டும் மௌன விரதம் பூண்டிருந்தார். அவரும் உறுதிமொழியைப் பற்றித் தங் கருத்தை வெளியிட முற்பட்டனர்.

### மூன்றுமொன்றே

உறுதிமொழியைப்பற்றி வெளிவந்த கருத்துக்களில் ஆராய்ச்சிக்குரியன மூன்று. ஒன்று இந்தியா மந்திரியினுடையது; மற்றொன்று கவர்னர்களுடையது; இன்னொன்று இராஜப்பிரதிநிதியினுடையது. இம்மூன்றும் பொருளில் ஒன்றாகவே யிருக்கின்றன. அவை ஒன்றாயிருப்பதில் வியப்பில்லை. ஒன்றிய கருத்தையே அவர்கள் வெளியிடக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இவ்வுண்மை இராஜப்பிரதிநிதி அறிக்கையில் நன்கு விளங்குகிறது. இந்தியா மந்திரியும், தாமும், கவர்னர்களும் பார்லிமெண்டின் பொறுப்பை ஏற்றுக் கடனாற்றுவோர் என்று இராஜப்பிரதிநிதி தோற்றுவாய் செய்தே தங்கருத்தை வெளியிடப் புகுந்தார். ஆதலால் இராஜப்பிரதிநிதியும் பார்லிமெண்டின் சட்ட வரம்பில் நின்றே தமது கடனையாற்றுதல் வேண்டும்.

### பேச்சும் அறிக்கையும்

இராஜப் பிரதிநிதி லார்ட் லின்லிதோ ஏறக்குறைய மூன்று மாத காலம் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித்து வந்தார்; "உறுதி மொழி" என்னென்ன உருவம் பெறுகிறது என்று பார்த்துக் கொண்டேவந்தார். உறுதிமொழியின் தொனி படிப்படியாகக் குறையும் என்று லார்ட் லின்லிதோ எதிர்நோக்கி யிருந்தார். தமது எதிர்நோக்கு ஈடேறியதாக அவர்நினைந்து, பேசவும் அறிக்கை வெளியிடவும் புகுந்தார் போலும்!

### மௌனத்தின் பயன்

"எதையும் பொறுத்துப் பார்த்தல் நல்லது" என்னும் ஆன்றோர் மொழியின் நுட்பத்தை லார்ட் லின்லிதோ நன்குணர்ந்தவர் என்பது அவர்தம் பேச்சால் தெரிகிறது. மௌனம், அமைதியையுந், தெளிவையும், திறத்தையும் பெருக்கவல்லதன்றோ? லார்ட் லின்லிதோ பேச்சில் அமைதியும், தெளிவும், திறமும் மிளிர்தல் வெள்ளிடைமலை.

### இந்தியர் அநுபவம்

லார்ட் லின்லிதோ சென்ற திங்கட்கிழமை இரவு ரேடியோ வாயிலாகப் பொது மக்களுடன் பேசியே அறிக்கையை வெளியிட்டார். அப்பேச்சில், அவர் தமக்கு இந்தியரைப்பற்றிப் பத்தாண்டநுபவம் உண்டு என்று குறிப்பிட்டுள்ளார். பத்தாண்டநுபவத்தில் இந்தியரைப் பற்றி அவர் என்ன உணர்ந்திருப்பர்? "இந்தியர் பேச்சில் வல்லவர்; தொடக்கத்தில் ஒற்றுமையாகவும் வீரமாகவும் காரியம் நிகழ்த்துவோர்; நாளேற நாளேறப் பிணங்குவோர்; இரக்கமுடையோர்; உறுதியில் உறைந்து நில்லாதவர்; விட்டுக்கொடுக்கும் இயல்பு வாய்ந்தவர்" என்று லார்ட் லின்லிதோ இந்தியர் நிலைமையை உணர்ந்திருப்பரென்று தெரிகிறது.

உறுதிமொழியைப்பற்றித் திடீரெனப் பதில் கூறாது, இத்துணை நாள் வாளா கிடந்து, இப்பொழுது லார்ட் லின்லிதோ பேசத் தொடங்கியதனால் அவர் இந்தியர் நிலைமையை ஒருவாறு உணர்ந்தவர் என்றே கூறலாம்.

### அறிக்கை!

லார்ட் லின்லிதோ அறிக்கையில் என்ன இருக்கிறது? லார்ட் ஜெட்லண்ட் பேச்சுக்கு வியாக்கியானம் அவ்வறிக்கையி லிருக்கிறது. லார்ட் லின்லிதோ நல்லெண்ணத்துடன் தங்கருத்தை வெளியிட்டுள்ளார். இந்தியரும் பிரிட்டிஷாரும் ஊழி ஊழி காலம் ஒத்து வாழவேண்டுமென்னும் எண்ணத்துடன் லார்ட் லின்லிதோ பேசியிருக்கிறார். அறிக்கை நல்லெண்ணத்தினால் செப்பஞ் செய்யப்பட்டதுஎன்பதில் சிறிதும் ஐயமில்லை.

### உள்ளுறை

அறிக்கையின் உள்ளுறையில் மட்டும் இந்தியர் எதிர்பார்த்த உறுதிமொழியில்லை. காந்தியடிகள் கடைசியாக வெளியிட்ட கருத்துக்கும் நற்பதில் கிடைக்கவில்லை. ஸர் மகமத் உஸ்மான் போன்றவர்கட்குக் காங்கரஸ் விரும்பிய உறுதிமொழி ஏறக்குறைய கிடைத்துவிட்டது என்று தோன்றலாம். உண்மையில் உறுதிமொழி அறிக்கையில் யாண்டு மில்லை என்று அறுதியிட்டுக் கூறலாம். உறுதிமொழி கேட்டல் கூடாது என்னுங் கருத்து அறிக்கையில் ஒளிர்கிறது. லார்ட் ஜெட்லண்ட் கூறாத உறுதிமொழியை லார்ட் லின்லிதோ எப்படிக் கூறுவர்? ஸர் மகமத் உஸ்மான் போன்றோர் காங்கரஸை ஒத்துழைக்கச் செய்யவேண்டுமென்று பெரும்பாடு படுகிறார். அப்பாட்டுக்கு நன்றி கூறவேண்டுவது நமது கடமை. அவர்தம் நோக்கம் மட்டும் வேறு விதம் என்பதைப் பொது மக்கள் உணர்தல் வேண்டும்.

### கவர்னரும் மந்திரிமாரும்

பார்லிமெண்ட் வழங்கியுள்ள சீர்திருத்தச் சட்டத்தை யொட்டி லார்ட் லின்லிதோ கவர்னர் பொறுப்பையும், மந்திரிமார் உரிமையையும் விளக்கியுள்ளார். அவ்விளக்கம் பழைய பாடமாகி விட்டது. லார்ட் லின்லிதோ ஆசிரியர் முறையில் நின்று விளக்க உரை பகர்ந்துள்ளார். அறிக்கையிலுள்ள விளக்க உரைகட்கு அளவே யில்லை. விளக்கத்தின் பொருட்டு லார்ட் லின்லிதோ கூறியதையே திரும்பத் திரும்பக் கூறியுள்ளார்.

ஆட்சிமுறை மந்திரிமார் வசமிருக்குமாறே பார்லிமெண்ட் மனப் பூர்வமாகச் சீர்திருத்தம் வழங்கி யிருக்கிறதென்றும், கவர்னர் அடிக்கடி மந்திரிமார் நடைமுறையில் தலையிடா ரென்றும், விசேஷ அதிகாரம் சிறு சிறு செயல்களிலெல்லாம் குறுக்கிடுதற்கென்று கவர்னர்களுக்குவழங்கப் படவில்லை யென்றும், தற்போது மூன்றுமாத அநுபவம் முன்னே நிற்கிறதென்றும், தற்கால மந்திரிமார் நாடோறும் ஆற்றிவருங் கடமைகளில் கவர்னர் தலையிடாமலிருந்து வருவது கவனிக்கத்தக்கதென்றும், மந்திரிமார் முழு உரிமையுடன் காரியங்கள் செய்துவரலாமென்றும், கவர்னருக்கும் மந்திரிமாருக்குங் கருத்துவேற்றுமை நேர்ந்தால் இருவரும் நன்றாகக் கலந்து கலந்து விஷயத்தை ஆராயலாமென்றும், மந்திரிமார் கவர்னர் மயக்கத்தைப் போக்க முயலலாமென்றும், இவர் அவர்தம் மயக்கத்தைப் போக்கமுயலலாமென்றும், உறவு கொண்டே கருத்து வேற்றுமையை ஒழுங்கு செய்து கொள்ளலாமென்றும், மந்திரிமார் தங்கருத்துக்களை அறிக்கை வாயிலாகவும் பொது மக்களுக்கு விளக்கஞ் செய்யலாமென்றும், கவர்னர் தாம் மனம் போனவாறு நடத்தல் இயலாதென்றும், அவரும் காரணங்களைச் சட்டப்படி விளக்கஞ் செய்யவேண்டுமென்றும், அக்காரணங்கள் பொருந்தியனவா என்று ஆராயப் பார்லிமெண்ட் இருக்கிறதென்றும், தமமாலும் இந்தியா மந்திரியாலும் கவர்னர்களின் செயல்கள் கவனிக்கப்படுமென்றும், சில காரணம்பற்றிக்கோலியுள்ள விசேஷ அதிகாரத்தின்மீதே கருத்துச் செலுத்தி ஐயுற்று மருள்வது தவறு என்றும், கவர்னரே பார்லிமெண்டுக்குப் பொறுப்புடையா ரென்றும், மந்திரிமாருக்கு அப் பொறுப்பில்லை யென்றும், அவர் இந்திய மக்களுக்கே பொறுப்புடையா ரென்றும், கவர்னரும் மந்திரிமாருங் கலந்து ஆலோசித்தும் நன்முடிவுக்கு வரவொண்ணாத வழியில் நெருக்கடி ஏற்பட்டால் மந்திரிமார் தாமே விலகலாமென்றும், அவரை விலக்குமாறு கவர்னரை உறுதிமொழி கேட்பது நல்லதன்றென்றும், விலக்க உறுதிமொழி கேட்பதைப் பார்க்கினும் விலகுவது சிறப்பென்றும், அவ்வுரிமை மந்திரிமாருக்கு இருக்கிறதென்றும், சமயம் நேர்ந்தால் கவர்னரே மந்திரிமாரை விலகச் சொல்லலாமென்றும், அவரை விலக்கவுந் தலைப்படலாமென்றும், இதற்கு உறுதிமொழி யெற்றுக்கென்றும் லார்ட் லின்லிதோ அறிக்கையில் விளக்கஞ் செய்துள்ளார். இவ் விளக்கம் பழைய பாடமென்று அடிக்கடி சொல்லவேண்டுவதில்லை.

### விளக்க ஆராய்ச்சி

விளக்கவுரை லார்ட் ஜெட்லண்ட் வாயிலாக வெளிவந்த போது அதற்கு நாம் இறுத்த பதில் நேயர்கட்குத் தெரியும். ஆதலால் லார்ட் லின்லிதோ விளக்க உரைக்கு விரிந்த பதில் வேண்டுவ தில்லை. சிலவற்றை மட்டும் ஆராய்தல் சாலும்.

மந்திரிமார் நாடோறும் புரியுங் கடமைகளி லெல்லாம் கவர்னர் அடிக்கடி தலையிடமாட்டாரென்றும், மூன்றுமாத காலமாக நடைபெற்றுவரும் தற்கால மந்திரிமார் ஆட்சி எடுத்துக் காட்டாக விளங்குகிறதென்றும் லார்ட் லின்லிதோ கூறியுள்ளார். நமது சென்னை மாகாணத்தை எடுத்துக் கொள்வோம். மூன்றுமாதகால மாகத் தற்கால மந்திரிமார் ஆட்சி நடைபெற்று வருவது உண்மையே. அம்மந்திரிமார் யார்? அம்மந்திரி சபை எத்தகையது? சொல்லவும் வேண்டுமா? பெரும்பான்மைச் சம்மதம் பெறாத மந்திரிமார் ஆட்சியைக் குறைவற நடாத்திக் காட்டும் பொறுப்பு, கவர்னருக்கே ஏற்பட்டிருக்கிறது. கவர்னர் தாம் அமைத்த மந்திரி சபையைப் பொன்னே போல் போற்றி ஓம்பக் கடமைப்பட்டிருக்கிறார். தற்கால மந்திரிமார் எத்தகையினர் என்று சொல்லத் தேவையில்லை. அவர், பதவி மோகம் ஒன்றே கொண்டு கவர்னர் வழிநிற்கும் பள்ளியில்பயின்று தேர்ச்சி யடைந்தவர். பஞ்சாப் படுகொலையை ஆதரித்தவரும் மந்திரி சபையில் வீற்றிருக்கிறார்! இவர்க்கும் கவர்னருக்கும் எவ்வழியில் கருத்து வேற்றுமை நிகழும்? தற்போதைய மந்திரிமார் கவர்னருக்கு நல்ல பிள்ளைகளாகவே நடந்து வருகிறார். கவர்னர் அவருடன் கூடிக் குலாவிக் காரியம் நடாத்தி வருகிறார். கருத்து வேற்றுமைக்கு இடம் ஏது?

### காங்கரஸ் மந்திரிமாரோ?

காங்கரஸ் சார்பில் மந்திரிசபை அமைந்தால், அதிலிருப்பவர் தற்கால மந்திரிமாரைப்போலிரார். அவர் உரிமையுணர்வுடன் கடனாற்றுவர்; தேசநலங்கருதியுழைப்பர்; அடிமைத் தளையைப் படிப்படியே அறுக்கும்வழியில் புகுவர். அவ்வேளையில் கவர்னர் வாளா கிடப்பரோ? இங்கே லார்ட் லின்லிதோ என் சொல்லுதல் கூடும்? மந்திரிமார் தாமே விலகல் வேண்டும்; அல்லது கவர்னரால் விலக்கப்படல் வேண்டுமென்றே சொல்லுதல் கூடும். இன்னோரன்ன நிகழ்ச்சிகளை யுளங்கொண்டே உறுதிமொழி கேட்கப்பட்டது.

சுதேசத் தொழில்களை அபிவிர்த்திசெய்ய மந்திரிமார் முயல்வதாக வைத்துக்கொள்வோம். அத்தொழின்முறைகளால் பிரிட்டனுக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்படுமானால் பார்லிமெண்டு சும்மா யிருக்குமோ? கவர்னர் சும்மா இருப்பரோ?

பரதேசப் பொருள்களுக்கு ஏராளமான வரி விதிக்க மந்திரிமாரெழுந்தால் கவர்னர் என் செய்வர்? வாய்பொத்தி யிருப்பரோ?



கொத்தப்பட்டனக் கோடைகாலப் பள்ளி அமைப்புப் போன்ற அமைப்புகட்கு இந்திய மந்திரிமார் இடந்தந்தே தீர்தல் வேண்டும். அங்கிலே நேரக் கவர்னர் இடந்தருவரோ?

இத்தகைய நிலைமைகள் நேராதவாறு காத்துக் கொள்ளவே கவர்னருக்கு விசேஷ அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. அவ்விசேஷ அதிகாரங்கள் மந்திரிமார் செயல்களைச் சமயம் நேரும்போதெல்லாம் தகைந்தே தீரும்.

காங்கரஸ் மந்திரிமார் இந்தியாவின் அடிமைத் தளையைக் களையும் முறையிலேயே சேவை செய்யப் புகுவர். அவர், வாராவதிகளைத் திறப்பதிலும், உருவச் சிலைகளைத் திறப்பதிலுங் காலங் கழிக்க மாட்டார். காங்கரஸ் மந்திரிமார் செயலில் கவர்னர் குறுக்கிடாமலிருத்த லரிது.

ஒரு முறை இருமுறை சமாதானத்துக்கு இடமுண்டாகலாம். பன்முறை எப்படி இடமுண்டாகும்? பூரண சுயஆட்சி பெறும் வரை இந்திய மந்திரிமார்க்கு இடர்உண்டு என்பதில் ஐயமில்லை.

### பதவி ஏற்பு

பூரண சுயஆட்சி பெறும்வரை என் செய்வது? ஆட்சி முறையைப் பிற்போக்காளர் வசம் விட்டிருப்பதா? பிற்போக்காளர் அதிகாரவர்க்கத்துக்கே துணை போவர். அதனால் காங்கரஸ் ஆக்கம் நாளடைவில் குறையும்; இந்தியா பரதேசியமயமாகும்; பல கேடுகள் விளையும். இன்னோரன்ன காரணங்களைக் கொண்டே காங்கரஸ் பதவி யேற்க ஒருப்படல் வேண்டுமென்று நாம் கூறி வருகிறோம். மந்திரிமார் மட்டும் நல்லவராகவும், இராஜ தந்திர நிபுணராகவு மிருந்தால் நிலைமைக் கேற்றபடி காரியங்களை ஒருவாறு நடாத்திக் கொண்டு போகலாம். நலன் விளைந்தவரை விளைக.

### பூரண சுய ஆட்சி

லார்ட் லின்லிதோ பூரண சுய ஆட்சியைப் பற்றியுங் குறிப்பிட்டுள்ளார். அவ்வாட்சி பெறவேண்டு மேல் தற்போதைய சீர்திருத்தத்தை உடைக்க முயலாது, அதனுடனொத்துழைக்க முயலல்வேண்டுமென்று அவர் இந்திய மக்களுக்கு விண்ணப்பஞ் செய்துள்ளார். ஒத்துழையாமைக்கு இது காலமன்று. ஆகவே ஒத்துழைத்துப் பார்ப்பதே தற்காலத்துக்குரிய சேவைக்குத் துணைபுரிவதாகுமென்று நாம் கூறுகிறோம்.

ஒத்துழைத்தால் பூரண சுய ஆட்சியை எதிர் பார்க்கலாமென்று பிரிட்டிஷ் அரசியல் ஞானிகள் முழங்கிய வண்ணமாயிருக்கிறார்கள். அப்பரீட்சையையுஞ் செய்து பார்ப்போம்.

### விண்ணப்பம்

காங்கரஸில் தகர்ப்புத் தீர்மானம் நின்று கொண்டே யிருக்கிறது. தீவிர வாதிகள் கனன்று கொண்டே யிருக்கிறார்கள். காந்தியடிகள் விரும்பும் முறையில் அரசாங்கத்தார் உறுதிமொழி கூற முற்படவில்லை. அரசாங்கச் சார்பில் நல்லெண்ணமும், மனமார்ந்த ஒத்துழைப்புக் குறியும் தோன்றியிருத்தல் உண்மை. காலதேச வர்த்தமானங்களை நோக்கிக் கடனாற்றுவதே அறிவுடைமை. காந்தியடிகள் நிலைமைகளை யுன்னியே எதையுஞ் செய்வர்; எதிலுந் தலைப்படுவர். அவரே சேனாதிபதி; சேனாதிபதி வழி நிற்பதே ஒழுங்கு; நியாயம்.

ஜூலை மாதம் ஐந்தாந் தேதி காரியக் கூட்டம் வார்தாவில் கூடும். அதன்கண் காந்தியடிகள் மனதுக்கியைந்த முறையில் தீர்மானம் நிறைவேறும் என்று எதிர்பார்க்கிறோம். காந்தியடிகள் வழி நிற்கவே மற்றத் தலைவர்களும் உறுதி கொள்ளல்வேண்டும். இச்சமயத்தில் அடிகளைக் கைவிடுவது, சுயராஜ்யம் வேண்டாமென்று தள்ளுவதை ஒக்கும். எச்சரிக்கை!

# சந்தர்ப்பத்தை நழுவ விட்டார்

## இன்னும் மறுப்பது கூடாது

### முடிவுக்கு வரும் வழியில்லை

### தலைவர்கள் வீண்பொழுது போக்கக் கூடாது

### இராஜப்பிரதிநிதியின் பேச்சு

### தேசத்தின் அபிப்பிராயம்

(இராஜீய நிருபர்)

இராஜப் பிரதிநிதி வெளியிட்ட அறிக்கை பற்றிய அபிப்பிராயங்கள் வருமாறு:—

**படேல்**

"காங்கரஸ் கோரிய எல்லா விஷயங்களும் அவ்வறிக்கையில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அறிக்கையின் போக்கிலிருந்து சமரசஎண்ணம் தெளிவாகிறது" என்று சர்தார் பட்டேல் சொல்கிறார். இராஜேந்திரபாபு எதுஞ் சொல்ல மறுக்கிறார். மகாத்மா காந்தி அதுபற்றி ஒன்றுஞ் சொல்ல முடியாதென்கிறார். காங்கரஸ் காரியக் கமிட்டி முடிவு சொல்லும்வரை காங்கரஸ்காரர் அவ்வறிக்கை பற்றிய அபிப்பிராயம் தெரிவிக்கவேண்டாமென்பது மகாத்மா காந்தியின் கருத்து.

**டாக்டர். காரே**

"உங்களுக்குச் சமாதானம் வேண்டுமா? அதுவும் அதில் இருக்கிறது. பயமுறுத்தல் வேண்டுமா? அதுவும் இருக்கிறது. உறுதிமொழி கேட்க வேண்டியது நியாயமே என்று அவர் ஒப்புக்கொள்கிறார். அதே சமயத்தில் உறுதிமொழி கேட்கக்கூடாதென்றும் சொல்கிறார். இருக்கிறபடியே இவ்வரசியலை ஒப்புக்கொள்ளவேண்டுமாம். மந்திரிகள் ராஜினாமா, செய்வதா அல்லது கவர்னர் அவர்களைத் தள்ளுவதா என்பதுபற்றி விவரிக்கையில் கவர்னர் அவர்களைத் தள்ளிவிடத் தயங்கமாட்டார் என்று தயக்கத்துடன் கூறப்பட்டிருக்கிறது" என்று டாக்டர் காரே கூறுகிறார்.

**ஸர் உஸ்மான்**

ஸர் மகம்மது உஸ்மான் பின் வருமாறு கூறினர்:—

"மந்திரிமார்களின் அன்றாட அலுவல்களில் கவர்னர் தலையிடக்கூடாதென்றும், சட்டவரம்பில் நின்று மந்திரிமார் கூறும் ஆலோசனைகளைத் தட்டக்கூடாதென்றும் காங்கரஸ் கேட்ட உறுதிமொழியைக் கொடுத்துவிட்டாரென்றே தெரிகிறது." ஐயோ! பாவம்! எங்கே! உறுதிமொழி! அப்படி ஒன்றையும் அவ்வறிக்கையில் காணோமே! ஒருகால் உஸ்மான் ஞான திருஷ்டியால் கண்டு பிடித்தாரோ என்னவோ?

ஜெயராம் தாஸ் தௌலத்ராம் தெரிவிப்பது:—

"மந்திரிமார் தாமாக விலகுவதா? கவர்னர் அவர்களைத் தள்ளிவிடுவதா? என்பதுபற்றி இராஜப்பிரதிநிதி கூறிய சமாதானம் எதுவும் ஒப்புக்கொள்ளத் தக்கதாயில்லை"

பிரிட்டிஷ் பத்திரிகைகளின் அபிப்பிராயங்கள் வருமாறு:—

**வருந்தத்தக்கது**

"இராஜப் பிரதிநிதியின் அறிக்கையை அரசாங்கத்தின் முடிவான எண்ணமாகக் கொள்ளலாம். இன்னமும் காங்கரஸ்காரர் பதவி ஏற்கப் பின் வாங்கிக்கொண்டு பல மாகாணங்களில் பார்லிமெண்டரி அரசாட்சி யில்லாமல் செய்துவிடுவார்களானால் அது மிக மிக வருந்தத்தக்கதே" என்று லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை கூறுகிறது.

**புத்திசாலித்தனமாகாது**

"இந்தியாவை ஒரு மகத்தான தேசமாக்குவதில் தானும் பங்கெடுத்துக் கொள்ளக்கூடும் என்பதைத் தெரிவிக்குமாறு ஹிந்து இந்தியாவை இராஜப்பிரதிநிதியின் அறிக்கை அறைகூவி அழைப்பதாகும். இராஜப்பிரதிநிதியின் பதில் மகாத்மா காந்தியைத் திருப்தி செய்யும். காங்கரஸ் மறுபடியும் பதவி ஏற்க மறுக்குமானால் அது புத்திசாலித்தனமாகாது; அதற்கும் நாட்டிற்கும் துரோகம் செய்வதாகும். பிரிட்டிஷ் அரசாங்கம் இதுவரை காட்டாத நேய மனப்பான்மை இந்த அறிக்கையில் காட்டப்பட்டுளது" என்று "டெய்லி ஹெரால்டு" கூறுகிறது. அது எப்படி வேண்டுமானாலும் கூறிக் கொள்ளட்டும். 'ஹிந்து இந்தியா' என்று பிரித்துக் கூறுவதுதான் நமக்குப் பிடிக்கவில்லை.

இந்தியப் பத்திரிகைகளின் அபிப்பிராயங்கள் வருமாறு:—

**ஆங்கிலோ இந்தியப் பத்திரிகையின் ஆனந்தம்**

"ஸ்டேட்ஸ்மென்" என்ற பத்திரிகை ஆனந்தத் தாண்டவம் புரிகிறது. "இராஜப் பிரதிநிதி உறுதிமொழி கொடுத்து விட்டார்" என்று அது கூச்சல் போடுகிறது.

**ஒப்புக் கொள்ள முடியாது**

"வஸுமதி" என்ற பத்திரிகை சொல்வதாவது:—

"அந்த அறிக்கையில் முக்கியமான அம்சம் எது? மந்திரிமாரின் அன்றாட காரியங்களில் கவர்னர் தலையிட முடியாது என்பதே. அதற்குச் சான்றாக 'அல்பாயசு மந்திரிசபை'யின் நிர்வாகத்தில் கவர்னர் தலையிடவில்லை யென்பது குறிப்பிடப்பட்டுளது. அந்த 'அல்பாயசு மந்திரி சபைகள்' கவர்னர்களின் சிருஷ்டி யல்லவா? ஆகவே இதை ஒரு காரணமாகக் காட்டுவதை ஒப்புக் கொள்ள முடியாது. இப்பொழுது காங்கரஸ் கேட்க வேண்டுவது என்ன? எல்லா மாகாணங்களிலும் மறுபடியும் மந்திரி சபைகள் அமைக்கப்படல் வேண்டும் என்பதே."

**முடிவக்கு வரும் வழியில்லை**

"இராஜப் பிரதிநிதியின் அறிக்கையின் போக்கும், நடையும் தவிர உற்சாக மளிக்கக் கூடிய விஷயம் அதில் ஒன்றுமில்லை. ஆனால் ஒயிட்ஹால் அறிக்கைகளை விட இது மட்டமானதன்று. இதுவரை நடந்த விஷயங்கள் சற்று விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அவ்வளவே" என்று "அட்வான்ஸ்" எழுதுகிறது.

'பன்னிப் பன்னிப் பேசப்பட்ட இந்த அறிக்கை காங்கரஸ் தலைவர்கள் ஒரு வித முடிவுக்கு வரும் வழியைக் காட்டவில்லை" என்று "ஆனந்த பஜார் பத்திரிகை" தெரிவிக்கிறது.

**சந்தர்ப்பம் நழுவவிடப்பட்டது**

"சரியான சந்தர்ப்பம் நழுவ விடப்பட்டது" என்றதலைப்புடன் "பம்பாய் கிரானிகள்" எழுதுவது வருமாறு:—

"மகாத்மா காந்தியின் கண்ணியமான தன்மைக்கு இணங்க மறுத்ததால் இராஜப்பிரதிநிதி ஓர் அரிய சந்தர்ப்பத்தைக் கைநழுவ விட்டார் என்று நாம் சொல்லாதிருக்க முடியாது. சொல்லடுக்குகள் தான் அவ்வறிக்கையில் நிறைந்திருக்கின்றன. சமாதானத்துக்கு அருகில் ஓர் அங்குலங்கூட அவ்வறிக்கை நம்மை இழுத்துச்செல்லவில்லையென்று சொல்லத் தேவையில்லை. இந்நிலையில் இன்னமும் அரசாங்கத்தார் இணங்கி வருவாரென்று சுயமரியாதையையும் காங்கரஸின் கௌரவத்தையும் கருதும் எந்தத் தலைவரும் காலத்தை விரயம் செய்வார் என்று நம்புவதற்கில்லை.".

இவ்விதமாக நாட்டின் பற்பலபாகங்களிலும் அபிப்பிராயம் பலவிதமாயிருக்கிறது. ஆகவே ஜூலை 5-ந் தேதி வார்தாவில் கூடப்போகும் காங்கரஸ் காரியக்கமிட்டியின் தீர்ப்பைத்தேசம் எதிர்நோக்கியிருக்கிறது. இராஜப்பிரதிநிதியின் அறிக்கையில் ஒன்றுமில்லை யென்பது தெரிந்த விஷயமே. காங்கரஸ் புது அரசியலை உடைக்கத்தானே தீர்மானித்திருக்கிறது. புது அரசியல் உடைபட்டு மூன்று மாதங்கள் ஆகின்றன. எம். என். ராய் சொல்கிறபடி, உறுதி மொழி வேண்டுவதேயில்லை. நமது நாட்டில் நிர்வாகம் செய்ய நம்மை யார் கேட்பது? பேசாமல் காங்கரஸ் பதவி ஏற்பதே நல்லதென்று தோன்றுகிறது. பதவிஏற்று நாட்டைச் சீர்திருத்திச் சுயராஜ்யப் போராட்டத்தை வலுப்படுத்தலாமே. இவ்விஷயங்களைக் காரியக்கமிட்டி சிந்தித்து முடிவு கூறுமென்று தேசம் எதிர்பார்க்கிறது.

## இடியேறு

### முழுப் பொய்

சென்ற வார "நவசக்தி" ௧௧-ம் பக்கத்தில் "சினிமா பகுதி" யில், திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரைப் பற்றிய செய்தி யொன்று வெளிவந்தது. அச் செய்தி ஆதாரமற்றதென்றும், முழுப் பொய்ம்மையுடையதென்றும் பின்னே தெரியலாயிற்று. ஆதாரமற்ற செய்திகளை அனுப்பாதிருக்குமாறு நிருபர்களைக் கேட்டுக் கொள்கிறோம். ஆதாரமற்ற செய்தி அபுத்திபூர்வமாக "நவசக்தி"யில் வெளிவந்தமை குறித்து வருந்துகிறோம்.

### நாற்பது மணிநேர வேலை

ஜினிவாவில் நடைபெறும் சர்வதேசத் தொழிலாளர் மகாநாடு ஒரு முக்கியமான தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டது. நெசவு ஆலைத்தொழிலாளரிடம் 40 மணி நேர வேலையே வாங்கவேண்டுமென்ற தீர்மானம் 88 ஓட்டுக்களால் நிறைவேற்றப்பட்டது. ஸர் எச். பி. மோடி போன்ற சில முதலாளிவர்க்கப் பிரதிநிதிகள் அதை ஆக்ஷேபித்தார்கள். ஆயினும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அஃது இந்தியாவில் எப்பொழுது நடைமுறையில் வரும்?

# ஏழை மந்திரியான விந்தை

## கால் நொண்டியாயும் சக்தி குறையவில்லை

## தகப்பனர் ஒரு நெசவுத் தொழிலாளி

### சந்தோஷ மண வாழ்க்கையின் சிறப்பு

லார்ட் ஸ்னோடனைப்பற்றி நீங்கள் எல்லாரும் கேட்டிருப்பீர்கள். அவர் 1924-ம் வருஷம் முதல் பிரிட்டிஷ் அரசியல் உலகில் பெரிய பதவி வகித்தவர். அவர் 1929-ம் வருஷம் ஜூன் மாதம் முதல் 1931-ம் வருஷம் அக்டோபர் மாதம்வரையில் ராம்சே மாக்டனல்ட் அமைத்த தொழில் மந்திரிசபையில் நிதிமந்திரியாகஇருந்தார். அவர் நிதி மந்திரியாக இருந்தபோது பிரிட்டிஷ் வருவாயில் பதினேழு கோடி பவுன் குறைவு ஏற்பட்டது. இந்நெருக்கடியை அவர் வெகு சாமர்த்தியத்தோடு சமாளித்துக்கொண்டார். அதுபோது அவர் பார்லிமெண்டில் "இந்நெருக்கடியைப் பிரிட்டன் வெகு திறமையாக நீக்கி விடும். இதுவே உலகத்துக்கு ஒரு பாடம் கற்பிப்பதுபோலாகும்" என்றார். 1931-ம் வருஷத்தில் காமன்ஸ் சபை கலைக்கப்பட்டது. லார்ட் ஸ்னோடன் தேர்தலில் அபேட்சகராக நிற்கவில்லை. ஆனால் அவர் தொழிலாளிகளின் முன்னேற்றத்துக்காகவே தேர்தலில் வேலை செய்தார்.

அவர் நாற்பது வருஷங்கள்வரை பார்லிமெண்டின் அங்கத்தினராக இருந்தார். அவர் வியாபாரம் எவ்விதத் தடையுமின்றி நடைபெறுதல் வேண்டுமென்ற எண்ண முடையவர்.

#### உடல் தோற்றம்

இவ்வளவு சிறப்புப்பொருந்திய லார்ட் ஸ்னோடனின் உடலைப்பற்றி அறிய விரும்புகிறீர்களா? அவர் தேகக் கட்டு வாய்ந்தவரல்லர்; குள்ளமானவர். அவருக்கு ஒருகால் நொண்டி; சிறுவயதில் சைகிளிலிருந்து விழுந்தாராம். அதனால் ஒரு கால் நொண்டியாய்விட்டது. நடக்கும்போது அக்காலை இழுத்துக்கொண்டே நடப்பார். அவருக்குப் பக்கத்தில் உறு துணை இரு தடிகள். இத்துணைவரைவிட்டு அவரால் சிறிது தூரமும் செல்லுதல் முடியாது. இப்படிபட்ட ஒருவர் எவ்வாறு தினந்தோறும் தம்முடைய காரியாலய வேலைகளைக் கவனித்தார் என்று பலர் சந்தேகப்படுதல் கூடும்.

#### மூளையின் சக்தி

ஆனால் அவர்தம் மூளை எவ்வளவு சக்தியுடையதோ தெரியவில்லை. சதா வேலை செய்து கொண்டிருக்கும். உடலுக்குள்ளே பல எண்ணங்கள் சுடர்விட்டு எரிந்து கொண்டிருப்பது போன்று அவரது பார்வை காணப்பட்டது. இவ்வித செய்கைகளே அவரை நிதி மந்திரியாக இருக்கும்படி செய்தன. ஒருசமயம் அவர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தலைமை ஸ்தானத்திலும் விளங்கினர்.

அவரது இளமை வாழ்க்கையைச் சிறிது பார்ப்போமானல நாம் ஆச்சரியப்படுவோம். அவர் ஒரு நெசவுத் தொழிலாளியின் குமாரர். யார்க்ஷயரிலுள்ள கவுலிங் என்ற கிராமத்தில் 1864-ம் வருஷம் ஜூலைமாதம் 18-ம் தேதி பிறந்தார்.

#### உத்தியோகம்

சிறுவயதில் ஓர் ஆரம்பப்பள்ளிக்கூடத்தில் படித்தார். அப்பள்ளிக்கூடத்துக்கே பின்னர் அவர் உபாத்தியாயருமானர். அவ்வேலையை விட்டுவிட்டுப் பிறகு அவர் ஓர் இன்ஷியூரன்ஸ் கம்பெனியில் அமர்ந்தார். வேலையில் இருந்துகொண்டே அவர் ஸிவில் ஸெர்விஸ் பரீட்சைக்குப்படித்தார். அதில் வெற்றி பெற்றதும் இருபத்திரண்டாவது வயதில் (1886-ல்) ஸிவில் இலாகாவைச் சேர்ந்தார்; முதலில் கலால் அதிகாரியாக இருந்தார். 1893-ல் பால்மவுத்துக்கு மாற்றப்பட்டார். அங்கே சைகிள் விபத்து நேர்ந்தது. அதனுல் ஒருகால் போய்விட்டது. அதனுல் அவர் ஸிவில் உத்தியோகத்தை விட வேண்டியவரானுர்.

உத்தியோகத்தை விட்டபிறகு வீட்டில் சும்மா இருந்தாரா? இல்லை. அவர் போன்றுரெல்லாரும் அப்படியிருக்கமுடியுமா? அரசியலைப் பற்றிப் படிக்க ஆரம்பித்தார். முதலில் சமதர்மத்தைக் குறித்த புத்தகங்களைப் படித்தார். பிறகு அவர் சமதர்மத்திலேயே பூர்ண நம்பிக்கை கொண்டார். அக்காலத்தில் சமதர்மவாதத்தில் சிறந்து விளங்கிய ஜேம்ஸ் செக்ஸ்டன், ஸ்னோடனுடைய நெருங்கிய நண்பரானுர். அவர் 'லிபரல்' கட்சியின் கொள்கைகளைப் பூர்ணமாக ஆதரித்தார்.

#### சமதர்மவாதி

அவர் முப்பதாவது வயதில் சுயேச்சை 'லிபரல்' கட்சியைச் சேர்ந்தார். இருபது ஆண்டுகளுக்குப் பின்னர் சமதர்மத்தைப் பற்றி நாடுமுழுவதும் பிரசாரம் செய்தார். பிரசாரம் சோறுபோடுமா? சோற்றுக்கு வழி தேடிக் கொள்ள வேண்டுமல்லவா? அதனுல் சைகிள் ஆபத்திலிருந்து தேறினதும் பத்திரிகாசிரியத்தொழிலை மேற்கொண்டார். இத்தொழிலை நிதி மந்திரியாகும் வரையில் விடவில்லை.

#### மதுவிலக்குப் பிரசாரம்

அவர் அரசியல் உலகத்தின் முன்னணியில் எவ்வாறு வந்தார் என்பதைச் சிறிது ஆராய்வோம். முதலில் அவர் பள்ளிக்கூடக்கமிட்டி ஒன்றில் அங்கத்தினரானுர்; அதிலிருந்து நகரசபைக்கு அங்கத்தினரானுர். அவர் நகரசபை அங்கத்தினராக இருந்தபோது மதுவிலக்குப் பிரசாரம் செய்தார்; அது குறித்துப் பல தீர்மானங்களையும் நிறைவேற்றினுர். இம்முயற்சியே பொதுமக்கள் மனத்தைக் கவர்ந்தது. அவர் நிதி மந்திரியாக இருந்தபோது அவர் காரியாலயத்துள் சாராயம் கொண்டு வருதல் கூடாதென்ற ஒரு கடுமையான உத்தரவைப் போட்டார்.

சில வருஷங்களுக்குப் பின்னர் அவருக்கு சேர்ஆர்டி. புரூஸ் கிளேஸியர், ராம்சே மாக்டோனல்ட் போன்ற சிறந்த சமதர்ம வாதிகளின் நட்பு ஏற்பட்டது.

#### பார்லிமெண்ட் அங்கத்தினர்

1906-ம் ஆண்டில் அவர் பிளாக்பர்ன் வட்டத்தில் அங்கத்தினராக நின்றுர். அது 'கன்ஸர்வேடிவ்' கோட்டை. அவ்விடத்தில் ஸ்னோடன் அங்கத்தினராக நின்றது பற்றிப் பலர் வருந்தினர். ஆனல் ஸ்னோடன் சளைத்தாரா? சளைக்கவில்லை. அவர் தேர்தலில் நடந்து கொண்ட முறை சிறந்த கன்ஸர்வேடிவ் வாதிகளுடைய மனத்தையும் கவர்ந்துவிட்டது. இறுதியில் வெற்றி கிடைக்காவிடினும் அவருக்குக் கிடைத்த வாக்குகளின் எண்ணிக்கையைக் கண்டு பலர் ஆச்சரியப்பட்டனர்.

1931-ம் வருஷம் வரையில் அவர் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்தார்; 1932-ம் வருஷத்தில் லார்ட் சபையில் அங்கத்தினரானுர். ஒட்டாவா விவாதத்தின் போது அவர் தமது பதவியை இராஜிநாமா செய்தார்.

அதுமுதல் அவர் தனி வாழ்க்கையைப் பெற்றுர். சில சமயங்களில் அரசியலில் நுழைவதுண்டு. எதற்காக? எதிரிகளுக்கு ஒருபயத்தை உண்டாக்குவதற்கே. அதனுல் அவர் அரசியல் விவாதத்தில் பெற்றிருந்த சிறப்பு விளங்குகிறது.

அவர் ஒரு சமயத்தில் தமக்கு உண்டாயிருக்கும் சிறப்புக்குக் காரணத்தை விளக்கினுர். இவ்வளவு சிறப்புக்கும் காரணர் அவரது மனைவியாரே. சந்தோஷகரமான மணவாழ்க்கையின் பயனுகவே அவர் கீர்த்திபெற்றுராம். அவ்விருவருக்குள்ளும் அன்பு இளமை தொட்டே வளரத்தொடங்கியது.

—'ஸண்டே டிஸ்பாட்ச்'

# ஜப்பானில் ரயில் வசதிகள்

## வசதிகளால் பெறுவது கொழுத்த லாபம்

## இந்தியா ஜப்பானைப் பின் பற்றுமா?

### லாகிரி வஸ்துக்களைப் பற்றிய புதுச் சட்டம்

(திரு. சமன்லால்)

ஜப்பான் ரயில்வேக்கள் கோடிக்கணக்காக லாபம் பெறுகின்றன. இந்தியாவிலோ நஷ்டம் என்ற பேச்சே கேட்கிறது. இதற்குக் காரணமென்ன? அவற்றை ஒன்றன்பின் ஒன்றுக ஆராய்வோமாக.

1. வேலைக்காரர்களுக்கு அதிக சம்பளம் கொடுப்பது இல்லை. ஜப்பானில் பிரதம மந்திரிக்கே மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம். அவர் வெளிச் செல்லும்போது ஒரு 'சூட்கேஸே' அவரது சாமான். தாணுக்காரர்களுக்கு ஆரம்ப சம்பளம் மாதம் நாற்பது ரூபாய். சிறிய உத்தியோகஸ்தர்களுக்குப் போதுமான சம்பளம் தரப்படுகிறது. ஒரு ஸ்டேஷன் வேலையை இரண்டுபேரே கவனித்துக் கொள்வர்; தோட்டி வேலையையும் அவர்களே செய்துவிடுவர். இந்தியாவில் இருப்பது போல அதிக செலவும் அரை மைல் நீளமான பிளாட்பாரங்களையும் கட்டுவதில்லை. தந்திக் கம்பங்களெல்லாம் அமெரிக்காவில் இருப்பதுபோல மரத்தூண்களே. இரும்பையே உபயோகிப்பதில்லை.

2. ரயில்வேயில் அந்நியநாட்டு உத்தியோகஸ்தர் அநேகர் இலர். இம்முறை சம்பளத்தைக் குறைப்பதற்கே கையாளப்படுகிறது. ஜப்பானில் சமீபத்திலேயே ரயில் ஏற்பட்டபோதிலும் குறித்த காலத்தில் ஸ்டேஷன்களுக்கு வண்டிகள் வருகின்றன. ஒரு விநாடியும் தவறுவதில்லை.

3. ரயில்வேக்களுக்கு வேண்டிய எல்லாச் சாமான்களும் ஜப்பானிலேயே செய்யப்படுகின்றன. இந்தியாவைப் போல இங்கிலீஷ் சாமான்களுக்காக அதிக செலவு செய்வதில்லை.

4. ஜப்பானில் ரயில்வேக்கள் பொது மக்களுக்காகவேயிருக்கின்றன. இந்தியாவைப்போல அங்கு மூன்றுவது வகுப்புப் பிரயாணிகளை ஆடுமாடுகளென்று நினைப்பதுஇல்லை. மூன்றுவது வகுப்பு வண்டிகளில் வெல்வெட் ஆசனங்களும், சுத்த குடிதண்ணீரும், துணி தோய்க்கும் சோப்பும், காகித கைக்குட்டைகளும், ரயில்வே தோட்டிக்கூட்டமும் பிரயாணிகள் சௌகரியங்களுக்காக வைக்கப்பட்டிருக்கின்றன. தோட்டிகள் ஏறும்போதும் இறங்கும்போதும் பிரயாணிகளுக்கு உதவி செய்கிறுர்கள்.

#### தூங்கும் வசதிகள்

5. ஓர் இரவுக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட்டால் மூன்றுவது வகுப்பில் தலையணை, உஷ்ணமான அறைகள் முதலியன கிடைக்கின்றன. இந்திய ரயில்வேக்கள் மத்திய வகுப்பை எடுத்துவிட்டு ஏன் இம்முறையை அனுசரித்தல் கூடாது.

6. இந்தியாவை விட ஜப்பானில் ரயில்வே கட்டணங்களெல்லாம் மிகக் குறைவாகவே இருக்கின்றன.

7. மூன்றுவது வகுப்புப் பிரயாணிகள் தங்கும் இடங்களெல்லாம் சௌகரியமாக இருக்கின்றன. பின்னுல் வரும் நண்பர்களுக்கு விஷயங்களை அறிவிக்கும் வசதிகளும் அங்கு இருக்கின்றன.

8. எல்லா வகுப்புப் பிரயாணிகளும் ஒரே அறையில் உட்கார்ந்து சாப்பிடுகிறுர்கள். சாப்பாட்டுச் செலவு இந்தியாவில் இருப்பதைவிட ஐந்து அல்லது ஆறு மடங்கு குறைவாகவே இருக்கிறது. சாப்பாடு போடுபவர் இளம் பெண்களே. ரயில்வே உத்தியோகஸ்தர்கள் பிரயாணிகளிடத்து மிக்க அன்பாக இருக்கிறுர்கள். ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் எனக்கு அவர் வீட்டுத் தோட்டத்திலிருந்த காய்கறிகளை அனுப்பினுர்.

#### அபாயமில்லாத ரயில்

9. வண்டிகள் மணிக்கு ஒரு தடவை சுத்தம் செய்யப்படுகின்றன. எச்சில் பாத்திரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. வட இந்தியாவில் ரயிலில்பிரயாணிகள் குளிரால் இறப்பதுபோல ஜப்பானில் இல்லை. உஷ்ணம் குளிர் முதலியவற்றை உண்டாக்கும் கருவிகள் ரயிலிலேயே இருக்கின்றன.

10. உணவுகளெல்லாம் சுகாதார முறையில் அளிக்கப்படுகின்றன.

11. குடிதண்ணீரைப் பற்றிக் கவலையேயில்லை. 'ஐஸ்' ஜலம் வண்டி முழுவதும் வைக்கப்பட்டிருக்கிறது.

12. டிக்கட் பெறுவதில் கஷ்டமேயில்லை. வீட்டிலிருந்தே டெலிபோனில் தெரியப்படுத்திஞல் டிக்கட் வீடு தேடிவரும். பிரயாணிகளுக்கு வசதிகள் தேடும் சங்கங்கள் பல இருக்கின்றன. அவை ரயில்வே கம்பெனியிடமிருந்து கமிஷன் பெறுகின்றன.

#### குழந்தைகளுக்கு இலவச பிரயாணம்

13. எட்டு வயதுவரையில் குழந்தைகளுக்கு ரயில்வே கட்டணமேயில்லை. ஜப்பான் அரசாங்கம் தற்போது ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அதன் சாரம் வருமாறு:—

எட்டு வயது வரையில் குழந்தைகளுக்குக் கட்டணம்வாங்குதல்கூடாது. இரவில் பிரயாணிகளுக்குப் போர்வைகள் இலவசமாக வழங்குதல்வேண்டும். பட்டணங்களுக்கருகில் கட்டணங்கள் குறைக்கப்படும். ஒருவர் தம்முடன் மூன்று குழந்தைகளை அழைத்துச் செல்லலாம். அதிகமானுல் அரைக் கட்டணம் கொடுத்தல் வேண்டும். இந்தியா இதைப் பின்பற்றுமா?

இந்தியாவிலும் ஜப்பானிலும் பீடி சுருட்டு, சிகரெட் முதலியன ரயில் வண்டியிலேயே பிடிப்பவர் பலர் இருக்கின்றனர். இங்கிலாந்து, ஐரோப்பா அமெரிக்கா முதலிய நாடுகளில் புகை பிடிப்பவர்களுக்குத் தனிவண்டிகள் இருக்கின்றன. ஜப்பானும் அதைப் பின் பற்றத் தொடங்கிவிட்டது. தற்போது ஜப்பானில் பல சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்கு எதிரில் உபாத்தியாயர்கள் லாகிரி வஸ்துக்களை உபயோகித்தல் கூடாது. ரயில்வேக்களிலும் அவர்களுக்குத் தனி இடம் ஏற்படுத்தப்படும்.

இந்தியா ரயில்வேக்களில் இவ்வித வசதிகளை ஏற்படுத்தும்படி நாம் ஏன் கிளர்ச்சி செய்தல் கூடாது? இவ்விதக் கிளர்ச்சிச் சீக்கிரத்தில் ஆரம்பித்தல் வேண்டும்.

—'மாடர்ன் ரெவ்யூ'

# ரோமாபுரி புத்தகசாலை

இதாலியிலுள்ள ரோமாபுரி பண்டைய நகரம். சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் ரோம்ராஜ்யம் இருந்தகாலத்து ரோமாபுரியே சிறந்த நகரமாக இருந்தது. அந்நகரத்தில் பெரிய புத்தகசாலை யொன்று இருக்கிறது. அப்புத்தகசாலை கி. பி. 1540-ல் திறக்கப்பட்டது அதில் 34,000 கையெழுத்துப் பிரதிகளும் ஏறக்குறைய இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் புஸ்தகங்களும் இருக்கின்றன.



சினிமா பகுதி

# சினிமாத் தொழில் வளம் பெருததேன்?

## விளம்பரம் செய்யுங்கள்

## ஆபாசமான படங்கள் வேண்டாம்

### முதலாளிகளுக்கு யோசனை

(ரஸிகன்)

இந்தியாவில் சினிமாத் தொழில் ஆரம்ப நிலையில்தான் இருக்கின்றது. மேற்கு நாடுகளில் சினிமாத்தொழிலுக்கு உள்ள நவீன சாதனங்கள் நம் நாட்டில் இல்லை. நம் நாட்டிலும் சினிமாத் தொழில் அபிவிருத்தியடைய வேண்டுமானுல் சில முக்கிய விஷயங்களைக்கவனிக்க வேண்டும்.

#### விளம்பரம் செய்யுங்கள்

விளம்பரம் செய்வதில் மேற்கு நாட்டார் கைதேர்ந்தவர். விளம்பரம் செய்வதாலேயே அவர்கள் உலகத்தை மயக்கி விடுகிறுர்கள். மக்கள் அவற்றைக்கண்டு பிரமிப் படைகிறுர்கள். "வியாபாரத்துக் கழகு விளம்பரம் செய்தல்" என்பதே அவர்களது வாய்ச்சொல். நம் நாட்டுச் சினிமாத் தொழிலிலும் நல்ல லாபம் கிடைக்க வேண்டுமானுல் மேற்கு நாட்டவர்களைப் போல நமது நாட்டுப் படமுதலாளிகளும் விமரிசையாக விளம்பரம் செய்ய வேண்டும். விளம்பரத்தால் கிடைப்பது வேறென்றுல் கிடைக்காது.

#### கட்டுப்பாடான ஸ்தாபனம் அவசியம்

மேற்கு நாடுகளில் சினிமாத்தொழில் உன்னத நிலையிலிருப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவர்கள் அமைத்துள்ள கட்டுப்பாடான ஸ்தாபனங்களே அவர்களுக்கு அத்தொழிலில் பெருமித வெற்றியளித்து வருகின்றன என்று கூறலாம். நம்மிடம் உள்ள பெரியகுறை என்ன வென்றுல் சினிமாத்தொழிலுக்குக் கட்டுப்பாடான ஸ்தாபனங்கள் இல்லாமையே.

நம் நாட்டுச் சினிமா ஸ்டுடியோக்களுக்குப் போங்கள். நிர்வாகஸ்தர்கள் தங்களையே பிரமாதமாக ஸ்தோத்திரம் செய்து கொள்ள ஆரம்பித்து விடுவார்கள். இவ்விஷயம் அருவருக்கத்தக்கது சினிமா நடிகர்களிடம் காட்டும் இறுமாப்பு போற்றக் கூடியதன்று.

#### படங்கள் மோசமாயிருப்பதேன்?

ஒன்றும் வேண்டாம். சினிமா நக்ஷத்திரங்களை எடுத்துக் கொள்ளுங்கள். சினிமா திரையில் முன்பின் தோன்றாதவர்கள்கூடத் தங்களைச் சினிமா நக்ஷத்திரங்கள் என்று சொல்லிக்கொள்வதற்குப்பின் வாங்குவதில்லை. அது சினிமாத் தொழிலுக்கே ஒருபெரிய குறை; அவமானம். நமது படங்கள் இத்த மோசமானவையாயும், வெறுக்கத்தக்கனவாயு மிருப்பதற்குக் காரணம் முற்கூறப்பட்ட அனுபவமற்ற நக்ஷத்திரங்களே.

அடுத்தபடியாகக் கதையை எடுத்துக்கொள்வோம். சினிமாவுக்குக்கதை எழுத முன்வருபவர்களுக்கு எது உசிதமான கதை என்பதே தெரிவதில்லை.

அந்தக்கதைகளுக்கும் வாழ்வில் நாம் காணும் சம்பவங்களுக்கும் சிறிதுகூடச் சம்பந்தமே யிருப்பதில்லை. யாராவது தற்கொலை செய்துகொள்ளப் போகும் போது சுகமாகப் பாடுவார்களா? இதுபோல இன்னும் எவ்வளவோ கட்டங்கள் பொருத்தமின்றி யிருக்கின்றன. அவைகளை யெல்லாம் ஒழித்தால்தான் நமது படங்கள் முன்னேற்றமடையும். மேலும் ஹாஸ்யரஸிப்பு என்ற பெயரால் ஆபாஸமான செயல்களெல்லாம் திரையில் காட்டப்படுகின்றன. அவற்றை நீக்கவேண்டும்.

அதன்பின் சினிமா தியேட்டர்களைப் பாருங்கள். சோடா கலர் விற்கும் பையன்களும், பீடி, சிகரெட், வெற்றிலை பாக்கு விற்போரும் அங்கே அலைகின்றனர். இதற்குப் பொது ஜனங்களையே குறை கூறவேண்டும். சினிமா முதலாளிகள் ஒரு சங்கம் அமைத்துப் பொதுஜனங்களுக்கு இவற்றை யெல்லாம் எடுத்துவிளக்கிக் கூறல்வேண்டும்.

நம் சினிமா படங்கள் பலவற்றில் கொலையும், திருட்டும் நடக்கும் கதைகளே காட்டப்படுகின்றன. கூடியவரை அவ்விதமான கதைகளை விலக்கவேண்டும். அவ்விதமான படங்களைப் பொது ஜனங்களுக்குக் காட்டுவது கொலை புரியத் தூண்டுவதற்குச் சமமாகும். இவ்விஷயங்களை யெல்லாம் சினிமா முதலாளிகள் கவனித்துத் தொழிலை அபிவிருத்தி செய்வார்களாக.

## பருத்தியின் நோய்

### சினிமா மூலம் பிரசாரம்

எகிப்தில் பருத்திப் பயிரை ஒருவிதப் பூச்சிகள் பீடிக்கின்றன. அந்தப் பூச்சிகள் எவ்விதம் செடிகளைப் பாதிக்கின்றன என்பதை விளக்கிச் சினிமா மூலம் பிரசாரம் செய்ய ஏற்பாடாகி வருகிறது. அந்தப் படம் நாடெங்கும் காண்பிக்கப்படும்.

## சர்வதேச சங்கத்தில் சினிமா

### சர்வதேசச் செய்திகள்

சர்வதேச சங்க மண்டபத்தில் சினிமாவுக்கென்று தனியாக ஓரிடம் ஒதுக்கப்பட்டுளது. சர்வதேசத்தியச் செய்திகளும் அங்கே சினிமாமூலம் காட்டப்படும். ஸ்பானியப் போர் பற்றிய படமும் அங்கே காண்பிக்கப்படும்.

## பிரிட்டனில் படக் காட்சிகள்

### அரசியல் பிரசாரத்துக்கு உபயோகம்

பிரிட்டனில் அரசியல் பிரசாரத்துக்குச் சினிமா உபயோகித்துக்கொள்ளப்படுகிறது. சிறு சினிமா வண்டிகளுடன் அரசியல் பிரசாரகர்ஒருவர் நாடெங்கும் சென்று பிரசங்கம் செய்கிறுர். பிரிட்டனை மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டு ஒரு படம் காண்பிக்கப்படும். ஐந்து வருஷங்கள் பிரிட்டனை விட்டு வெளிநாடு சென்றிருந்த ஒருவன் பிரிட்டன் அவ்வருஷங்களில் அடைந்துள்ள அபிவிருத்திகளைச் சொல்வதாக மற்றொரு படம் தயாரிக்கப்பட்டுளது. மற்றொரு படம் கப்பல் கட்டுதல் முதலியனபற்றி விளக்கும்.

## காரில் இருந்தே காண்க!

### படக்காட்சி உலகில் நவீனம்

காரில் உட்கார்ந்த படியே படக்காட்சிகளைக் காண்பதற்கு அமெரிக்காவில் வசதிகள் செய்யப்படுகின்றன. கைக் குழந்தைக்காரர்கள் படக்காட்சி பார்க்க முடியாமல் தவிக்கிறுர்கள். அந்தச் சிரமத்தைப் போக்கவே இம்முறை கையாளப்படுகிறது. சுமார் நானூற்றைம்பது கார்கள் தங்க வசதியுள்ள தியேட்டர்கள் இருக்கின்றன. கார்களின் முன்சக்கரங்கள் சிறிது பள்ளமான இடத்தில் நிறுத்தப்படுகின்றன. அதனுல் என்ன ஆகிறது? காரில் பின்னுல் உட்கார்ந் திருப்பவர்களும் கூடப் படக்காட்சியைக் கஷ்டமின்றிப் பார்ப்பதற்கே இவ்வசதி ஏற்படுத்தப் பட்டிருக்கிறதாம். திறந்த வெளியில் கார்கள் நிறுத்தப்பட்டிருக்கும். குழந்தைகளை வீட்டில் விட்டு வருவதற்குப் பதிலாகக் கையில் எடுத்துக்கொண்டே தாய்மார்கள் வரலாம்.

மைசூர் சுதேசியப் பொருட்காட்சியைத் திரு. சத்திய மூர்த்தி திறந்து வைத்தார்.

o o o

ஸ்தலஸ்தாபனத் தேர்தல்களை நடத்த தமிழ்நாட்டுக் காங்கரஸ் காரியக் கமிட்டியால் நியமிக்கப்பட்ட உபகமிட்டி அதற்கான சட்டதிட்டங்களை வகுத்துள்ளது. மற்றப்படி ஆங்காங்குத் தேர்தல்களை நடத்த 'ஆட் ஹாக்' கமிட்டிகளும் நியமிக்கப்பட்டன.

# முஸோலினியின் வஞ்சம்

## லாயிட் ஜார்ஜின் நடுக்கம்

[o]

## இப்போதே பிரிட்டன் விழித்துக் கொண்டது

### வின்ஸர் படங்களுக்குமா தடை?

#### ஸ்பெயின் யுத்தம்

பில்பயோ பிரதேசத்தைத் தம் வசமாக்கிக்கொள்ளக் கலகக்காரர் தம்மாலானவரை முயன்று வந்தார். இதுவரையில் அங்குப் பதினுயிரம்பேரைக் கைது செய்திருக்கின்றனராம். அயர்லாந்திலிருந்து ஸ்பெயினுக்கு எழுநூறு தொண்டர்கள் அடங்கிய தொண்டர் படை ஒன்று வந்தது. அஃது அயர்லாந்துக்கே திருப்பி அனுப்பப்பட்டது.

பாஸ்க்யு அரசாங்கம் பில்பயோ பிரதேசத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றப்பட்டு விட்டது. கலகக்காரர் செயல் மிகக் கொடுமையாகவே காணப்படுகிறது. பில்பயோ நகருக் கருகில் ஏழைப் பெண்கள் மீதும் சிறுவர்மீதும் வெடி குண்டுகள் எறியப்பட்டனவாம். பில்பயோ பிரதேசத்தில் கலகக்காரருக்கும் நஷ்டங்கள் ஏற்படாமல் இல்லை. அப்பக்கமும் ஆயிரக் கணக்கானபேர் உயிர் துறக்கின்றனர்.

பின்னர் வந்த செய்திகளால் பில்பயோ கலகக்காரர் வசமாய் விட்டதென்று தெரிகிறது. ஜெனரல் பிராங்கோவுக்கு ஹேர் ஹிட்லர் ஒரு வாழ்த்துச்செய்தி அனுப்பியுள்ளார். இதைக் கண்டும் பாதுகாப்பு என்று கூறிக் கொண்டிருக்கும் பிரிட்டனையும் பிரான்ஸையும் என்னென்று கூறுவது?

#### பாதுகாப்பு நிபந்தனைகள்

ஸ்பெயின் கடற்கரைப் பாதுகாப்பு பற்றிப் பலதகராறுகள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. பிரிட்டன், பிரான்ஸ், இதாலி, ஜெர்மெனி முதலிய நான்கு நாடுகளின்சார்பாக ஸ்பெயினில் யுத்தம் புரியும் இருதரப்பாருக்கும் ஓர் அறிக்கை அனுப்பப்பட்டிருக்கிறது. அதில் மூன்றுவித நிபந்தனைகள் இருக்கின்றன. அவை வருமாறு:- முதலாவதாக ஸ்பெயின் கரையிலுள்ள அந்நியநாட்டுக் கப்பல்கள் நிபந்தனைக் குட்பட்டேயிருத்தல் வேண்டும். இரண்டாவதாக ஸ்பானியக் கப்பல்கள் இக்கப்பல்களைத் தாக்குதல் கூடாது. இந்நிபந்தனைகளை மீறினுல் சமாதானம் நிலைக்காதென்பதே மூன்றுவது நிபந்தனையாகும். இம்மூன்று நிபந்தனைகளை விரும்பின இதாலியும் ஜெர்மெனியும் ஸ்பெயினில்என்ன செய்கின்றன? பாதுகாப்பு பாதுகாப்பு என்று பேசிக்கொண்டே கிழவர்களையும், சிறுவர்களையும் வதை செய்கின்றன. இப்படியே பாதுகாப்பு என்று சொல்லிக்கொண்டே ஸ்பெயினை நாசஞ்செய்துவந்தால் இறுதியில் எவ்வாறு முடியுமென்று தெரியவில்லை.

பாதுகாப்பு முறையால் பயன் ஒன்றும் விளையவில்லை என்பதைப் பிரிட்டன் அறிந்து கொண்டது. அதனுல் அந்நியநாட்டு உதவி ஸ்பெயினுக்குக் கிடைக்காமல் இருக்கச் செய்யமுயற்சிகள் நடைபெறுகின்றன.

#### ருஷ்யாவின் உறுதி

ஸ்பெயினுக்கு எவ்வகையிலாயினும் உதவிபுரிய வேண்டுமென்று ருஷ்யா துணிந்துவிட்டது. அல்மீரியா துறைமுகத்தை ஜெர்மெனி நாசப்படுத்தியது ஞாபக மிருக்கலாம். அச்சம்பவத்திற்குப் பின்னர் ருஷ்யாவின் பல கட்சிகளும் ஒன்று சேர்கின்றன. ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு ஸ்பெயினுக்கு வேண்டிய உதவிகள் செய்யப்படும்.

#### லாயிட் ஜார்ஜின் நடுக்கம்

தற்போது ஸ்பெயினில் நடக்கும் யுத்த அக்கிரமங்களைக் கண்டு திரு. லாயிட் ஜார்ஜும் நடுங்குகிறுர். அவர் 1914-ல் நடந்த ஜெர்மெனி யுத்தகாலத்தில் பிரிட்டனின் சர்வாதிகாரியைப் போன்று விளங்கி அந்த யுத்தத்தை நடத்தியவர். அந்த யுத்தத்தில் அவர் ஒருவருடைய நெஞ்சமே கலங்காது இருந்ததென்று கூறப்படுகிறது. அப்படிப்பட்ட ஒருவருடைய நெஞ்சம் இப்போது கலங்குமானுல் ஸ்பெயின் யுத்தத்தைப் பற்றி என்ன கூறுவது? அவர் பாஸ்க்யு தலைவருக்கு ஒரு தந்தி அனுப்பியுள்ளார். அத்தந்தியில் "ஸ்பெயினில் குழந்தைகள் கதறுகின்றன. மற்ற நாடுகளெல்லாம் இவ்வநியாயத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கின்றன. உலக சரித்திரத்தில் இஃது ஒரு பாபகாலமாகும்" என்று கூறுகிறுர்.

#### இதாலி ஜெர்மெனி குறும்பு

ஜிப்ரால்டருக்கு அருகிலிருந்த இதாலியக் கப்பல்மீது ஸ்பெயின் அரசாங்கம் பல வெடிகுண்டுகளைச் சொரிந்ததாம். அதனுல் பலநஷ்டங்கள்ஏற்பட்டுள்ளன வென்று கூறப்படுகிறது. இப்படி அடிக்கடி ஒருவர் கப்பலை மற்றொருவர்தாக்குவது சகஜமா யிருக்கிறது. அதனுல் பாதுகாப்பு நிபந்தனைகளுக்குப் பாதகம் நேரிடுகிறது. இதனுடைய உண்மை விளங்கவில்லை. ஒருவேளை இதாலிய கலகக்காரருக்கு உதவி செய்யவேண்டி அரசாங்கத்தின் தாக்கலுக்குச் சித்தமாகவே இக்கப்பல்கள்நிற்கும்போலும்.

பாதுகாப்பு பற்றிய பேச்சுக்கள் எவ்வளவு இருந்த போதிலும் சீனர் முஸோலினி ஸ்பெயின் விஷயத்தில் தலையிட்டே தீர்வார் என்பதற்குப் போதிய காரணங்கள் அவர்தம் பேச்சிலிருந்தே கிடைக்கின்றன. சென்ற வாரத்தில் அவர்,

> "ஸ்பெயின யுத்தத்தில் கணக்கற்ற 'பாஸிஸ்ட்' கொள்கையாளர் மடிந்தனர். காயமடைந்தவர் இரண்டாயிரம் பேர். இதற்குக் காரணராய் யிருந்தவர்மீது வஞ்சத்தை எப்படித் தீர்த்துக்கொள்வது என்பது பற்றி இன்று கூற முடியாது. அவர்கள்மீது வஞ்சம் தீர்ப்பது மட்டும் உறுதி"

என்று கூறினுர். இப்படிக் கூறும் இவர் கலகக்காரருக்கு உதவி புரியாமல் இருப்பாரா?

ஸ்பெயின் அரசாங்கம் லீப்சிக் என்ற ஜெர்மெனி கப்பலையும் தாக்க முயன்றதாக ஒரு கதையை ஜெர்மெனி கட்டிவிட்டிருக்கிறது. இதை அரசாங்கம் மறுக்கிறது. இதற்குள் லண்டனில் ஜெர்மெனியின் பிரதிநிதியாகவிருக்கும் ஹெர் ரிப்பன்டிராப் அட்டகாசம்செய்துவிட்டார். அது பற்றி பிரிட்டிஷ் அந்நியநாட்டு மந்திரியின் காரியாலயத்தில் ஒரு கூட்டமும் நடைபெற்றது.

#### பாதிரிமாரின் பதட்டச் செயல்

ஆங்கிலப் பாதிரிமார் வின்ஸர் கோமகனுக்கு எவ்வளவு தீங்குகள் இழைக்க முடியுமோ அவ்வளவையும் செய்து வருகின்றனர். தற்போது வின்ஸர் தம்பதிகள் படத்தையும் விவாகக் காட்சிகளையும் பிரிட்டனில் காட்டுதல் கூடாதென முயற்சிகள் நடைபெறுகின்றன.

#### பிரான்ஸ் நெருக்கடி

பிரெஞ்சு அரசாங்கத்தில் ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டது. சென்ற வாரத்தில் பண நிர்வாகத்தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டதாகக் கூறப்பட்டது. அந்த நெருக்கடியைத் தவிர்த்த திரு. பிளம் வேறொரு மசோதாவைச் சட்ட சபையில் கொண்டு வந்தார். அதற்கு நேர்விரோதமான மசோதா ஒன்று சட்டமாக்கப்பட்டது. அதனுல் திரு பிளம் சட்டசபையின் நம்பிக்கையை யிழந்து விட்டார் என்று ஏற்பட்டது. எனவே அவர்தமது பிரதம மந்திரிபதவியை இராஜிநாமா செய்து விட்டார்.

## ஸ்டேஷன் மாஸ்டர் மீது வழக்கு

### ரயிலிலிருந்து தள்ளிச் சிறை செய்தனராம்

டிக்கட் வாங்கவில்லையாம்

பெண்மணி வழக்குத் தொடர்கிறார்

ஸ்ரீமதி சரோஜினிதேவி என்பவர் வட இந்தியாவில் தாரன்பாத்தைச் சேர்ந்த கௌரவமான குடும்பத்தில் தோன்றியவர். பிரத்யோத நகர் ஸ்டேஷன் மாஸ்டரான பானர்ஜி மீதும், என். கே. ராய் என்ற ரயில்வே கார்டு மீதும், மற்றுமிரு தோட்டிகள் மீதும் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்.

பகனூர்பாத்தில் அந்தப் பெண்மணி தமது ஒன்பது வயதுக் குமாரனுடன் இரண்டாவது வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டாராம். நேரம் இல்லாமையால் டிக்கட் வாங்கவில்லையென்று சொல்லப்படுகிறது. பிரத்யோதநகரில் ரயில் நின்றது. நின்றதும் ஸ்டேஷன் மாஸ்டரும், கார்டும் அப்பெண்மணியிடம் பரிகாசமாகப் பேசினார்கள் என்று வாதி வாதிக்கிறார். முதன் முதலில் ஸ்ரீமதி சரோஜினி தேவி அதைப் பொருட்படுத்தவில்லையாம். பின்னர் தாங்கமுடியாத கோபம் வரவே அவர் அவர்களைக்கண்டபடி திட்டினாராம். "நீங்கள் கண்ணியமான மனிதர்களல்லவா? உங்களுக்குத் தாய்மாரில்லையா? சகோதரிமாரில்லையா?" என்று அவர் கோபித்துக்கொண்டதாகச் சொல்கிறார்.

உடனே அந்த ஸ்டேஷன் மாஸ்டரும் கார்டும் அப்பெண்மணியிடம் டிக்கட் கேட்டார்கள். ரயிலுக்கு நேரமாகி விட்டதால் டிக்கட் வாங்க முடியவில்லையென்றும், வேண்டுமானால் அபராதம் முதலியவைகளுடன் முழுத்தொகையும் கொடுக்கத் தாம் சித்தமாயிருப்பதாகவும் சொன்னாராம் அப்பெண்மணி. அவர்கள் அப்பேச்சைக் காதில் போட்டுக்கொள்ளவே யில்லையாம்.

இரண்டு தோட்டிப்பெண்களைக் கூப்பிட்டு அந்தக் கௌரவமான குடும்பத்திலுதித்த பெண்மணியை வண்டியிலிருந்து வெளியே தள்ளச்சொன்னதாகவும் அதனால் அப்பெண்மணிக்குச் சிறிது காயம் ஏற்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. ஐந்து மணி நேரம் வரை அப்பெண்மணி ஓர் அறையில் அடைக்கப்பட்டிருந்ததாகவும், பிறகு ஒரு மைல் தூரத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குக் கால்நடையாகவே அழைத்துச்செல்லப்பட்டதாகவும் வாதி சொல்கிறார்.

அந்தப் பெண்மணியின் சகோதரர் இவ்விஷயங்களையெல்லாம் கேட்டு ஓடிப்போய்த் தமது சகோதரியை ஜாமீனில் மீட்டுவந்தாராம். அதன் பிறகே வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது.

## முதலைகள் மத்தியில் விழுந்தார்

### காயம்படாமல் கரைசேர்ந்தார்

உபாத்தியாயர் தப்பிய விந்தை!

பசியோடு தவித்துக் கொண்டிருக்கும் முதலைகள் நிறைந்த ஒரு குளத்தில் ஒரு மனிதர் விழுந்துவிடுவது! முதலைவாயில் சிக்காமல் உயிரோடு தப்பிவிடுவதா? என்ன ஆச்சரியம்! கராச்சிக்குப் பதினைந்து மைல் தெற்கே ஒரு முதலைக்குளம் ஒன்றிருக்கிறது: அந்தக்குளத்தைத் தம் மாணவர்களுக்குக் காண்பிக்கச் சென்றார் ஓர் உபாத்தியாயர். அந்தமுதலைகளைப் பற்றிச் சிறுவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கையில் அவர் அக்குளத்தில் விழுந்து விட்டார். முதலைகள் அவரை நோக்கி ஓடிவந்தன. ஆனால் அந்தக் குளத்துச் சொந்தக்காரர் மிகுந்த துணிகரமாக அந்தக் குளத்தில் குதித்து உபாத்தியாயரைக் கரை சேர்த்தார்.

## 'போலீஸ் நாய்கள்' துப்பறிகின்றன

### அபூர்வமான குணங்கள் அவசியம்

அதிசயமான சம்பவங்கள்

போலீசாருக்குச் சகாயம் செய்வதற்காக உலகின் பல பாகங்களிலும் நாய்கள் பழக்கப்படுகின்றன. அவற்றிற்குப் 'போலீஸ் நாய்கள்' என்று பெயர். அந்த விதத்தில் பழக்கப்பட்ட நாய்கள் களவுபோன பொருள்களையும் திருடர்களையும் துப்பறிந்து கண்டுபிடித்து விடுகின்றன. இம்மாதிரி ருசிகரமான கதைகள் எவ்வளவோ வெளிவந்திருக்கின்றன.

நார்போக் என்ற விடத்தில் ஒரு கான்ஸ்டேபிளிடம் 'போலீஸ் நாய்' ஒன்றிருந்தது. ஒரு வீட்டில் திருடன் நுழைந்ததாகக் கேள்விப்பட்டுக் கான்ஸ்டேபிள் சென்றான். அவனுடன் நாயும் சென்றது. அது தன் அபூர்வமான அறிவால் திருடனைக் கண்டுபிடித்து விரட்டிக் குலைத்தது. கான்ஸ்டேபிள் திருடனைப் பிடிக்கத் தவறிவிட்டான். நாய் பிடித்து விட்டது. உடனே திருடன் நாயைச் சுட்டுவீழ்த்தமுயன்றான். என்ன ஆச்சரியம்! அதற்குச் சிறிதும் அந்தநாய் பயப்படவேயில்லை. போலீஸ் உடைதரியாத யார் சுட்டாலும் அதற்கு அந்த நாய் பயப்படாதிருக்கப் பழக்கப்பட்டிருக்கிறது. அதன்பின் கான்ஸ்டேபிள் திருடனைப் பிடித்துவிட்டான்.

ஜெர்மெனியில் பழக்கப்படும் நாய்கள் இன்னும் அதியாச்சரியமாகத் துப்பறிகின்றன. மியூனிச்நகரில் இவ்விதம் ஏராளமான நாய்கள் பழக்கப்படுகின்றன.

'போலீஸ் நாய்'க்கு எவ்வளவோ குணங்கள் இருக்க வேண்டும்; அஞ்சா நெஞ்சும் ஆண்மையும் இருக்கவேண்டும்; எவ்வளவு ருசிகரமான உணவாயிருந்தபோதிலும் அந்நியரிடமிருந்து அதைப் பெற்றுக்கொள்ளக் கூடாது. கீழ்ப்படியுங் குணம் 'போலீஸ் நாய்'க்கு அவசியம் இருக்கவேண்டும்.

ஆறடி உயரம் தாண்டுவதற்கு அந்த நாய்களுக்குத் தெரியவேண்டும். துப்பாக்கிப் பிரயோகத்தைக்கண்டு கலங்காமல் உறுதியா யிருக்கவேண்டும். மோப்பம் பிடிக்க நன்றாகத் தெரியவேண்டும். இவ்வளவு இருந்தாலும் இன்னொரு விஷயம் அவசியம். மோப்பம் பிடித்துக் கண்ட சமாசாரத்தைப் போலீஸ் ஸ்டேஷனில் தெரிவிக்கவேண்டியது அவசியம்!

நாய்களுக்கு 'ரோஷம்' அதிகம். ஆதலால் ஒரு பெரியநாயுடன் சிறிய நாயையும் சேர்த்தால் இரண்டையும் சீக்கிரத்தில் பழக்கி விடலாமாம்.

## விவேகானந்தர் சங்கம்

கொழும்பு

இச்சங்கத்தின் முப்பத்து நான்காவது ஆண்டு அறிக்கை கிடைத்தது. இந்த ஸ்தாபனத்தின் சார்பாகப் புத்தகசாலையும், வாசகசாலையும் நடத்தப்பட்டு வருகின்றன. சைவ சிரோமணிகளின் குருபூசைகள் பல நடைபெறுகின்றன. மதத்துக்காகவும், தமிழ் முன்னேற்றத்துக்காகவும் வகுப்புக்களும், பரீட்சைகளும் நடக்கின்றன. இந்தச் சங்கத்தின் முயற்சிகள் பெரிதும் பாராட்டத்தக்கன.



## வாயாடி வம்பனா யிருப்பதேன்?

### பொய்யன் சத்தியம் பேசலாம்

சோம்பன் சுறுசுறுப்புப் பெறலாம்

கலியுகத்தில் கண்ட உண்மைகள்

ஹாரோகேட் என்றவிடத்தில் மனோதத்துவ சாஸ்திரியின் மகாநாடு ஒன்று நடைபெற்றது. அப்பொழுது மான்செஸ்டரைச்சேர்ந்த டாக்டர் போஹார்ட் என்பவர் செய்த பிரசங்கத்தின் சாரம் வருமாறு:—

"நம்முடைய உடலில் பதினாறு விதமான பொருள்கள் கலந்திருக்கின்றன. இந்தப் பதினாறு வகையான பொருள்களும் பதினாறு வகையான குணங்களை ஏற்படுத்துகின்றன. இவற்றில் ஏதாவது ஒரு பொருள் நம் உடலில் அதிகரித்துவிட்டால் அக்குணமும் அதிகரித்துவிடும். உதாரணமாகச் சில பொருள்களையும் அவற்றின் குணங்களையும் சொல்கிறேன்.

சதா பேசும் வாயாடிகளையும், சுறுசுறுப்புள்ளவர்களையும், கெட்டதையும் நல்லதாகக் கொள்ளும் மனப்பான்மையுடையவர்களையும் பாருங்கள். அவர்கள் உடலில் பிராணவாயு அதிகமாயிருக்கும்.

'ஹைட்ரஜன்' என்பது ஜலவாயு. அந்தவாயு உடம்பில் அதிகமாயிருந்தால் அவர்கள் பொறுமை சாலிகளாகவும் சாந்தமுள்ளவர்களாகவும், மூளைவேலை அதிகம் செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

'கார்பன்' என்ற பொருள் ஒருவர் உடம்பில் அதிகமாயிருப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்கள் சோம்பேறிகளாயும், மந்தபுத்தி யுள்ளவர்களாயும், சாப்பிட்டுவிட்டுக் குறட்டைவிட்டுத் தூங்குபவர்களாயும், உற்சாகமில்லாதவர்களாயும் இருப்பார்கள்.

'கால்ஷியம்' என்பது ஒரு வகைச் சுண்ணாம்புப் பொருள். அந்தப் பொருள் அதிகமாக உடம்பில் இருக்கக் கூடியவர்கள் பொய் சொல்லமாட்டார்கள்; உலகில் ஆச்சரியப்படத் தக்க வேலைகளைச் செய்வார்கள்.

சிலருக்கு இருந்தாற்போ லிருந்து உணர்ச்சி பொங்கும். நிலையற்ற விதத்தில் அவர்கள் வாழ்வார்கள். அத்தகையோர் உடம்பில் 'ஸல்பர்' என்ற கந்தகப் பொருள் அதிகம்.

'முகவெட்டு' என்று சொல்கிறார்களே! அது சிலருக்கே இருக்கும். அவர்கள் முகத்தில் வசீகரம் இருக்கும். அவர்கள் உறுதியான குணமுடையவர்களாயிருப்பார்கள். அவர்கள் உடம்பில் இரும்புப் பொருள் இருக்கும். (அதனால்தான் அயக்காந்த லேகியம் சாப்பிட வேண்டும் போலும்!)

'பொட்டாஷியம்' என்ற சத்துப் பொருள் சிலர் உடலில் அதிகமா யிருக்கும். அவர்கள் மிகுந்த உற்சாக முடையவர்களா யிருப்பார்கள்; சந்தோஷமாகவும் தமாஷாகவும் காலங் கழிக்க விரும்புவார்கள்; தளராத ஊக்கமுடையவர்களா யிருப்பார்கள்.

சோம்பல் நீங்க வேண்டுமா? கோபம் தொலைய வேண்டுமா? ஸ்திரமான புத்தி வேண்டுமா? பொய் பேசாதிருக்க வேண்டுமா? வேண்டுமானால் அதற்குத் தக்கபடி இந்தச் சத்துப் பொருள்களை மாற்றிக் கொள்ளுங்கள்.

---

கும்பகோணம் நகரசபை, சாக்கடை ஜல வசதித்திட்டம் சம்பந்தமாக அதிக வரி விதிக்க மறுத்துவிட்டது. அரசாங்கம் தற்காலிகமாக அத்திட்டம் பற்றிய பேச்சை நிறுத்தி வைக்கச் சொல்லிவிட்டது. நகர சபை, அதிக வரிவிதிக்க இணங்கினால் அரசாங்கமும் இணங்கும் போலும்!

## நாம் நாகரிகம் அடைந்தோமா?

### பூமியின் வயதும் நாகரிகமும்

இவ்வுலகம் 40 கோடி வருஷங்களாக ஆவி வடிவில் சுழன்று, பிறகு எண்பது கோடிவருஷங்களில் கடினபூமியாயிற்று. அதன் பின்னர் இருநூறு கோடிவருஷங்களுக்குப் பின்னரே பூமியின்மீது செடி கொடி வர்க்கம் தோன்றியது. பிறகு எண்பது கோடி வருஷங்களுக்குப் பிறகே உயிர் வர்க்கம் உண்டாயிற்று. இவ்வுயிர் வர்க்கம் தோன்றிய நூற்றுஇருபது கோடி ஆண்டுகளுக்குப் பிறகே பெரிய மிருகங்கள் உண்டாயின. மனிதன் தோன்றி எத்தனை வருஷங்களாயின வென்பதே இப்போது விஞ்ஞான ஆராய்ச்சியாளருக்குள் உள்ள சண்டை. சிலர் பத்து லட்சம் வருஷங்களுக்கு முன்னர்தான் மனிதன் இவ்வுலகத்தில் தோன்றினான் என்று கூறுகிறார். சுமார் பன்னீராயிரம் வருஷங்களுக்கு முன் மனிதன் கல்லையே ஆயுதமாகக் கொண்டு அநாகரிகனாக இருந்தான் என்று சிலர் கூறுகின்றனர். இப் பன்னீராயிரம் வருஷத்தை, இப்பூமியின் வயதுடன் கட்டுக்கு ஒப்பிட்டால், அதில் ஒரு துளி நீரே எனலாம். இக்குறுகிய காலத்தில் மனிதன் தகுந்த அளவு அறிவை விருத்தி செய்து கொண்டிருத்தல் முடியாத காரியமெனச் சிலர் கருதுகிறார். எனவே அவர்தம் ஊகத்தின்படி நாம்இப்போது அநாகரிகநிலையே இருக்கிறோம். சில ஆராய்ச்சியாளர் இன்னும் பத்துலட்சம் வருஷங்களை மனிதன் தனது அறிவை விருத்திசெய்து கொள்ளுதல் கூடுமென்று கூறுகிறார். அதனால் உண்மை நாகரிகத்தைப்பெற இன்னும் பத்து லட்சம் வருஷங்கள் வேண்டியிருக்கின்றனவாம். அதனால் இப்போது நாம் மேற்கொண்டிருப்பது அநாகரிக வாழ்வே.

## சூயஸ் கம்பெனியுடன் எகிப்து ஒப்பந்தம்

சூயஸ்கால்வாய் கம்பெனியுடன் எகிப்து அரசாங்கம் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. அந்த ஒப்பந்தத்தின் முக்கியமான மூன்று அம்சங்கள் வருமாறு: சூயஸ்கால்வாய் கம்பெனி வருஷாவருஷம் எகிப்து அரசாங்கத்துக்குக் கொடுக்கும் இரண்டு லக்ஷம் பவுனை மூன்று லக்ஷமாக்குதல். போர்ட்செட் துறைமுகத்துக்கும் இஸ்மெயிலியாவுக்கும் இராணுவப்பாதை போடும் வேலையைக் கம்பெனி ஏற்றுக்கொள்ளல். அதற்கு மூன்று லக்ஷம் பவுன் செலவாகும். தற்பொழுது கம்பெனியில் 25 சதவிகிதம் எகிப்தியர்கள் வேலையளிக்கப்படுகிறது. அது 33 சதவிகிதமாக்கப்படும்.

## பெண்கள் ஆண்களானர்கள்

இக்காலத்துப் பெண்கள் எல்லா[illegible] ஆண்மக்களுடைய வேலைகளைச்செ[illegible] முந்திக்கொள்கிறார்கள். இம்முறை [illegible] றுக்கணக்கான வருஷங்களாக [illegible] கினியா என்னும் நாட்டில் நடந்து [illegible] கிறது. தற்போது அந்நாட்டிலு[illegible] பெண்களெல்லாரும் ஆண்களைப்போ[illegible] மயிரை வெட்டிக்கொண்டும், முகக்ஷ[illegible] ரம முதலியன செய்துகொண்[illegible] ஆண்களுடைய வேலைகளைச் செய்கி[illegible] கள். பெண்மக்கள் வேலைக்கு என் [illegible] வது? அவ்வேலையை ஆண்மக்கள் எ[illegible] துக்கொண்டார்கள். ஆண் பிள்ளை[illegible] பெண்களைப் போலத் தலைமயி[illegible] வளர்த்துக்கொண்டு. நகை அணி[illegible] கொள்கிறார்கள். பெண்கள் நகையை[illegible] ம்புவதில்லை. இதுகலிகாலக்கொடுமை[illegible]

---

பெய்ஸ்பூர் காங்கரஸ் நடைபெ[illegible] தில் நாற்பதாயிரம் ரூபாய் ல[illegible] கிடைத்திருப்பதாக வரவேற்புக்கம்[illegible] ஆடிடர் பரிசோதனையில் தெரிய[illegible] கிறது.



இளங்கோவடிகள் இயற்றிய

## சிலப்பதிகார மூலமும்

தை. ஆ. கனகசபாபதி முதலியார்

## விளக்கவுரையும்



### 1. மங்கலவாழ்த்துப் பாடல்

(தொடர்ச்சி)

பொருட்சுருக்கம்

மகரந்தப் பொடிகள் பரவிய ஆத்தி மாலை அணிந்த சோழனுடைய குளிர்ச்சி பொருந்திய வெள்ளைக் குடைபோன்று உலகைக் காத்தலினால், நாம் சந்திரனைப் பன்முறை துதிப்போம்.

சோழனுடைய ஆக்கினைச் சக்கரம்போல மேருமலையை வலமாகச் சுற்றி வருதலினால், நாம் சூரியனைப் பன்முறை துதிப்போம்.

கடலை வேலியாகவுடைய உலகத்திற்கு அச்சோழனது கொடைபோல, ஆகாயத்தே நின்று தான் இடைவிடாது பெய்தலால், நாம் சிறந்த மழையைப் பன்முறை துதிப்போம்.

உலகத்தில் அச்சோழன் குலத்தோடு புகழால் உயர்ந்து பரவி நடத்தலினால், நாம் அழகிய காவிரிப்பூம் பட்டினத்தைப் பன்முறை துதிப்போம்.

அதனால், பொதியமலையும், இமயமலையும், கொடிய அரசாட்சியால் வேறு நகருக்குச் செல்லுதலை அறியாத பழைய குடிகள் பொருந்திய தனக்கே உரிய சிறப்பினை உடைய புகாரும், அசைவு இன்றி நிலைபெற்றுள்ளன என்று சொல்வதல்லாமல், அவ்விடங்களில் உயர்ந்தவர் இருத்தலினால், சான்றோர் அவற்றிற்கு அழிவு கூறார்.

அதனால், தேவலோகத்திலுள்ள நீண்ட நகரத்தின் புகழும், நாகலோகத்தின் போகமும் நிலைபெற்ற புகார் நகரத்திலே, மேகம்போன்ற ஈகை அமைந்த கையை உடைய மாநாய்கன் என்பவனுடைய குலத்தில் தோன்றியவள் கண்ணகி என்பாள். அவள் பொன்மயமான மின்னற்கொடியைப் போன்றவள்; பன்னிரண்டு வயதுக்குட்பட்டவள்; 'தாமரைப்பூவில் பொருந்தும் இலக்குமியினுடைய புகழை உடைய வடிவு இவளது வடிவு' என்றும், 'குற்றமற்ற அருந்ததியின் கற்பு இவளது கற்பு' என்றும் பெண்கள் தொழுது வணங்கும்படி விளங்கிய பெருமை பொருந்திய குணங்களை உடையவள்; யாவராலும் விரும்பத்தக்கவள்.

பெரிய நிலமுழுவதையும் ஆளுகின்ற அரசனாகிய கரிகாற் சோழனை முதல் குடியாக வைத்து எண்ணப்பெற்ற அப்புகாரில் ஒப்பற்ற குடிகளுடன் ஓங்கிய செல்வத்தை உடையவன் மாசாத்துவான் என்று சொல்லப்படுவான். அவன் வண்டியாலும் கப்பலாலும் வருகின்ற செல்வத்தை ஏழைகளுக்கு நிறையக் கொடுப்பவன். இப்பெரிய செல்வத்துக்குரியவன் மகன் கோவலன் எனப்படுவான். அவன் பதினாறு வயதுக்குட்பட்டவன்; பூமியின் எல்லையைக் கடந்த புகழை உடையவன்; சந்திரனைப்போன்ற முகத்தை உடைய மகளிர், இசையினைக் குறையச்செய்த தம் சொற்களால் தமது கூட்டத்தில் கொண்டாடி, "இவன் நேராகப் பார்த்துத் துதிக்கவல்ல முருகக் கடவுள்" என்று கீர்த்தியைப் பரப்பி, அன்பினால் தம் மனத்தில் கொண்டு துதிக்கும் உரிமையை உடையவன்.

கோவலன், கண்ணகி ஆகிய இருவருக்கும் அவர் தாய்தந்தையர் ஒரு சிறந்த நாளில் திருமணக்கோலத்தைச் செய்து காண விரும்பினர்; அதனால், யானையின் பிடரியின்மேல் அழகிய அணிகளையுடைய பெண்களை அமர்த்தி, சிறந்த நகரத்திற்குத் திருமணத்தை அறிவிக்குமாறு செய்தனர். அப்பொழுது முரச வாத்தியங்கள் முழங்கின; மத்தளங்கள் ஒலித்தன; சங்குகளின் முழக்கம் முறைப்படி எழுந்தன; வெண்மையான குடைகள் அரசன் புகழ் எழுந்ததுபோல வெளிப்பட்டன. வீதியில் மங்கல்யம் வலம்செய்தது.

மாலை தங்கிய தலைகளை உடையனவும், வயிரமணி பதிக்கப்பெற்றனவும் ஆகிய தூண்கள் பொருந்திய மண்டபத்தில், நீல நிறம் பொருந்திய பட்டுத் துணியாகிய மேற்கவிப்பின் கீழ் அமைக்கப்பெற்ற முத்துக்களால் ஆகிய அழகிய பந்தலின் கீழ், சந்திரன் உரோகிணியைச் சேரும்போது, அருந்ததியை ஒத்த கண்ணகியோடு கோவலன், சிறந்த வயது சென்ற அந்தணன் வேதத்தில் கூறப்பெற்ற சடங்கு முறைகளைக் காட்ட, தீயினை வலமாகவந்தான்.

வாசனையுள்ள கலவைச் சேற்றைப் பூசியவரும், மலரைச் சூடியவரும், விளங்குகின்ற உடலை உடையவரும், பேசுபவரும், பாட்டைப் பாடுபவரும், ஒதுங்கிப் பார்க்கும் பார்வையினை உடையவரும், சந்தனத்தைக் கொண்டவரும், வாசனைப் புகையைக் கொண்டவரும், விளங்குகின்ற மாலையை உடையவரும், ஏந்தி நிற்கும் இள முலைகளையுடையவரும், இடித்த சுண்ணத்தை உடையவரும், விளக்கை உடையவரும், கலத்தை உடையவரும், வாய்க்கின்ற பாலிகையையும் முளைக்குடத்தையும் கூட்டமாக உடையவரும், தோன்றிய புன்சிரிப்பை உடையவரும் ஆகிய பூங்கொடியைப்போன்ற மகளிர், "இவள் தன் காதலனைப் பிரியாமலும், அவன் தன் காதலியை அணைத்த கைகள் தளராமலும் இருத்தலைக் கெடுக்கும் தீமை நீங்குவதாக" என்று கடவுளைத் துதித்து, சில மலர்களைத் தூவி, "இமயமலையில் நிலைபெறச்செய்த ஒளி பொருந்திய புலி உருவம் எழுதப்பெற்ற கொடி, உலகத்திலுள்ள பொன்மயமான மேருமலையின் முடியினிடத்தில் நிற்பதாகுக; ஒப்பற்ற ஆக்கினைச் சக்கரத்தைச் சோழன் எவ்விடத்திலும் செலுத்துவன் ஆகுக" என்று வாழ்த்தி, அழகிய இடமகன்ற உலகத்திலே உள்ள அருந்ததி போன்ற கண்ணகியை மங்கலம் பொருந்திய நல்ல படுக்கையில் சேர்ச் செய்தனர்.

(தொடரும்)

## இலக்கியப் பூஞ்சோலை

ஆடல் பாடல்

### மயில்

(வித்துவான் - இ. சிவகுருநாதன்)

ஆடலும் பாடலும் மக்கட்கு மகிழ்சி ஊட்டுவனவாகும். மகிழ்ச்சியை விழையாத மாந்தரும் உளரோ! ஆண்டியும் மகிழ்ச்சியை வேண்டுகின்றான். அரசனும் மகிழ்ச்சியை விழைகின்றான். வேளாளன் வேண்டுவது என்னை? வேலைக்காரன் விரும்புவது யாது? மகிழ்ச்சி யென்று சொல்லவும் வேண்டுமோ! மக்கள் மட்டுமா மகிழ்ச்சியை நாடி உழைக்கின்றார்கள்? இல்லை; இல்லை. மாக்களும் மகிழ்ச்சிநாடி அரும்பாடுபடுகின்றன.

மகிழ்ச்சியில்லா வாழ்வு, ஒரு வாழ்வாகுங்கொல்! அவ்வாழ்வு வெறும் பாழாகவன்றோ முடியும். மகிழ்ச்சியளிக்கும் வாயில்கள்பலவுள. ஒருவன் செல்வச் சிறப்பால் மகிழ்ச்சியுறலாம்; அன்றிக் கல்விப் பெருக்கால் மகிழ்ந்து வாழலாம். செல்வமும் கல்வியும் வாய்க்கப் பெறாதஒருவன் எவ்வகையில் மகிழ்ச்சியுறுவது? உண்டியின் திண்டாட்டமும் உடுக்கையின் இடுக்கணும் ஏழை மகனை இன்புறுத்துமா? அன்றி துன்புறுத்துமா? துன்பக் கடலில் துயருழும் ஏழைக்கு எளிதில் மகிழ்வளிக்கவல்லன ஆடல்பாடல். ஆடலைக்கண்டும் பாடலைக் கேட்டும் அம்மகனுறும் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

மகிழ்ச்சியின் மறைவு

ஆடல் பாடல் மகிழ்ச்சியளித்தல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு எழுந்தனவல்ல. ஒழுக்கம் ஊட்டவும், உண்மை உணர்த்தவும், அவை துணைபுரிய எழுந்தன. அவ்வாடலும் பாடலும் இன்று எந்நிலையிலுள்ளன? தமிழனே! சிலம்பின் ஒலி கேட்ட நின்செவியில் இன்று எவ்வொலி நுழைகின்றது? இறைவனையும் உருக்கிய நின் எழிசைச் செல்வங்கள் யாண்டு மறைந்தன? உள்ளதும் போக்கி, இல்லதுங்கொண்டு அலமரும் எங்கட்கு அருள் சுரப்பாயாக!

ஆடலும் பாடலும் பண்டு பலவகையில் நிகழ்ந்தன. மக்கள் ஆடிப்பாடல் ஒருவகை. மாக்கள் ஆடிப்பாடுதலைக் கண்டு களிப்புறல் மற்றொருவகை. மக்கள் ஆடிப்பாடி இன்பூட்டுதலை இன்றுங் காணலாம். மாக்கள் பாடி ஆடுதலை இன்றுகாண இயலுமோ? இயலாவன்றே. பண்டுமாக்கள் ஆடிப்பாடியதை ஒரு புலவர் பாடல் வாயிலாக அறிவுறுத்துகின்றார். அப்பாடற்கண், மாக்களின் ஆடலும் பாடலும் இன்றுங் கண்கூடாக காட்சி வழங்குகின்றன!

மயில் நடை

கொண்டை அசைய அசைய, கழுத்தை நீட்டி நீட்டி அழகிய மயில் நடந்து வருங்கோலத்தைக் காணுங்கள்! கருதுங்கள்! அதன் நீலத்தோகையின் நீட்சியையும், பீலிக்கண்ணின் பெற்றியையும் என்னென்று பேசுவது? மயிலின் சாயலும் குயிலின் பாடலும் நுழையாத நூலும் உண்டுகொல்! பெண்களைப்பற்றிப் பேசுமிடந்தொறும் புலவர்கள் மயிலை மறந்திலர். குறிஞ்சி நிலத்தைக் கூறுமிடத்தும் மயில்முன் வந்து தோன்றுகின்றது. முல்லை நிலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. மயில்கள் பல்கி வாழுமிடம் முல்லையன்றோ! அழகிய மயில் ஆடுங் கோலத்தைஎவரே காண அவாவுறுதார்!

கபிலரெனும் புலவர் மலைவளங்காண மலைக்குப் போந்தார். அவணுள்ள இயற்கையழகும் ஏனைய நிகழ்ச்சிகளும் புலவர் உள்ளத்தை ஈர்த்து விட்டன. புலவர் அவை ஒவ்வொன்றையும் உற்று நோக்கிச் சென்றார். பைங்கடல் பொங்கி எழுந்தாலன்ன பசிய மாச் சோலைகள் மலையைச் சூழ்ந்து விளங்கின. பாவலர் அப்பசுமை யழகில் சொக்கி நின்றார்.

ஒருபால், மழைதவழும் மலை அண்ணாந்து நிற்கின்றது. மலைமிசை ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் கோடைக்காற்றால் ஆடியசைந்து இசை யெழுப்புகின்றன. பளிங்கெனத் தெளிந்த அருவிநீர் இழுமென ஒலித்து இழிந்துவருகின்றது. கலைக்கூட்டங்கள் கடிய குரலெழுப்பிக் களித்து விளையாடுகின்றன. மலைச்சாரலில் மலர்ந்துள்ள பூக்கண் வண்டுகள் பாண்மிழற்றுகின்றன. மரத்துமிசையிருக்கும் மந்திகள் மருண்டு பார்க்கின்றன. அழகிய மயில் இடையே ஆடுகின்றது.

புலவர் வியப்பு

அக்காட்சியைக் கபிலரெனும் புலவர் கண்டார். கண்டவர் வேறொன்றும் நினையாது வியந்து நின்றார். மயிலினாட்டமும் மற்றையவற்றின்பாட்டும் புலவர் உள்ளத்தைப் பிணித்து விட்டன. அப்பாற் செல்லவில்லை. அவ்விடத்தே நின்று அவ்வாடலைக் கண்குளிரக் காண்கின்றார்! பாடலைச் செவியின்பம் சிறக்கக் கேட்கின்றார்! இத்தகையகாட்சியை அவர் என்றும் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. காணாத ஒன்றைக் கண்டவர் உள்ளம் எந்நிலையிலிருக்கும்? சொல்லவும் வேண்டுமோ! புலவர் வியந்து வியந்து அக்காட்சியைக் காணுகின்றார். அவருள்ளத்துவேறொரு நினைவுதோன்றுகின்றது. என்னை? கழைக் கூத்தன் தெருவிலாடுங் கோலம் அவர் நெஞ்சத்தே வந்துற்றது. கூத்தன் வளைந்த மூங்கின்மேலேறி நின்று ஆடுவான்; அவன் மனைவி அண்மையிலமர்ந்து மத்தளம் முழக்குவாள். அவள் பிள்ளைகள், குழலும் வங்கியமும் உடனின்று ஊதுவர்; இடைநின்று பாடுவர். மக்கள் சூழ்ந்து நின்று அவற்றைக் கண்டுகளிப்பார்கள்.

அக்கூத்தனை யொப்ப மயிலாடுவதாகப் புலவர் கருதுகின்றார். என்னை? குழலோசையும் யாழொலியும், முழவின் முழக்கமும் வங்கிய வாத்தியமும் இனிய இசை எழுப்பவும், மந்திகள் மருண்டு பார்க்கவும் வளைந்த மூங்கிற்கண் வனப்பு மிக்கமயில் உள மகிழ்ந்து உலவிக் கூத்தாடுகின்றது.

குழலும் யாழும், முழவும் வங்கியமும் என்னை? ஓங்கி வளர்ந்த மூங்கில் குழல் ஊதுகின்றதாம். எங்ஙனம் ஊதுகின்றது? ஆடியசையும் மூங்கிற்கள் தேய்வால் சிறுதுளைகள் பொருந்த அத்துளைக்கண் கோடைக்காற்று நுழைகின்றது. காற்றுநுழையவே குழலோசை எழுகின்றது.

இழுமென வொலித்து அருவிகள் இழிந்து வருகின்றன. அவை ஏற்ற இழிவுகளில் மாறிமாறி விழுந்து எழுதரும் ஒலிமுழவு ஒலியைத் தோற்றுவிக்கின்றது.

கலைக்கூட்டங்கள் கடிய குரலெழுப்பிக் கத்துகின்றன. அவை கத்தும் ஒலி வங்கியஒலியை ஒத்து விளங்குகின்றது. [வங்கியம்—யானைத்துதிக்கை போன்றதொரு வாத்தியம்.]

சினைப்பூக்களிலும் சுனைப்பூக்களிலும் சென்று சென்று வண்டுகள் முரல்கின்றன. அவைமுரலும் ஒலி யாழொலியொப்பத் திகழ்கின்றது. இத்திறத்தவாய இசைக்கருவிகளைத் துணைக்கொண்டு மயிலாட, மந்திக்கிள் அவற்றை மருண்டு பார்க்கின்றன.

தமிழ்ச் செல்வர்காள்! கூத்தாடும் மயிலின் கோலம் என்னே! என்னே! இசையெழுப்புங் கருவிகளின் சிறப்பை என்னென்றுரைப்பது? கூத்தைக் காணும் மந்திகளின் மகிழ்ச்சியை ஏட்டில் எழுத இயலுங்கொல்! இக்கூத்தல்லவோ கூத்து! இக்காட்சியல்லவோ

# பூனைக்கு நாய் பிறந்தது!

## பிரஸவ நிபுணர்கள் பிரமிப்பு

அமெரிக்காவில் நடந்த அதிசயம்

ஆச்சரியத்துக்குக் காரணம்தெரியவில்லை

பூனைக்கு எங்கேயாவது நாய்க்குட்டி பிறக்குமா? உலகில் கேள்விப்பட்டிராத அதிசயங்கள் எல்லாம் அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில்தானே நடக்கும்! வில்மிங்டன் என்ற பட்டணத்தில் அன்னி மே என்றபெண்மணி ஒருபூனையைச் செல்வமாக வளர்த்து வந்தார். சென்ற மாதத்தில் அந்தப் பூனை பிரஸவித்தது! மூன்று குட்டிகள் பிறந்தன. இரண்டு பூனைக்குட்டிகள். ஒன்று நாய்க்குட்டி; ஆண் நாய்க்குட்டி. "ஹெரிடிடி ஜர்னல்" என்ற பத்திரிகை இதை எப்படி வர்ணிக்கிறது தெரியுமா?

"நெற்றியும் முதுகும் கறுப்பு. உடல் வெள்ளை. நீண்ட அழகான காதுகள். அது பிறந்ததும் தவழ்ந்தது; பூனையைப்போல 'மியா மியா' என்று சப்தம் செய்தது; நாயைப் போல எலும்பைக் கடித்தது; முன் கால்களை நீட்டிக் கொண்டு நாயைப் போலவே படுத்துக் கொண்டது."

"ஹெரிடிடி சங்கம்" இவ்விஷயம் பற்றிக் கூறுவது வருமாறு:— "அது இருபிறவிப் பூனை - நாய் என்று சொல்வதற்கும் இல்லை. தாயின் மனப்படியே பிள்ளை பிறக்கும் என்ற கொள்கைக்கும் உறுதியில்லை. இம்மாதிரியான பிரஸவங்களைப்பற்றி நாங்கள் ஆராய்ந்து வருகிறோம். மனிதர் சம்பந்தப்பட்ட வரையில் மனத்தின் பலஹீனமேஇதற்குக் காரணம் என்று நாங்கள் கருதுகிறோம்."

## உலகப் பிரமசாரிகள் சங்கம்

பெண்கள் திட்டக் கூடாதாம்!

பீட்டர்ஸன் என்ற பிரம்மசாரி உலகப்பிரம்மசாரிகள் சங்கம் ஒன்றை ஸ்தாபிக்கத் தீர்மானித்திருக்கிறார். தம்முடைய சங்கத்தின் செல்வாக்கின் பேரில் 'உலகப் பிரம்மசாரிகள் தினம்' என்று ஒன்றைக்குறிப்பிட்டு அந்நாளை எல்லாரும் கொண்டாடவேண்டுவாராம். அந்நாளில் எந்தப் பெண்ணும் பிரம்மசாரிகளைத் திட்டக் கூடாதாம்!

காட்சி! இத்தகைய கூத்தை யாம் என்றே காண்பம்.

கூத்தைக் கண்டு களித்த கபிலர் அக்கூத்தை நமக்கும் காட்டுகின்றார். அக்கூத்து இதோ காட்சியளிக்கின்றது. காண்மின்! காண்மின்!!

"ஆடமைக் குயின்ற
அவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி
குழலிசை யாகப்
பாடின் னருவிப்
பனிநீர் இன்னிசை
தோடமை முழவிற்
றுதை குரலாகக்
கணக்கலை யிகுக்குங்
கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல்
வண்டியா ழாக
வின்பல் விமிழிசை
கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை
மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத்
தியலி யாடுமயில்
நனவுப்புகு விறலியிற்
றோன்று நாட!"

—அகம் - 82. கபிலர்.

# விம்மி விம்மி அழுது காதலித்தான்!

## கிராமபோன் துணை செய்தது

நவீனக் காதல் முறை

காரியம் கைகூடிற்று

வியன்னாவில் நடக்கும் அதிசயங்கள் உலகில் வேறு எங்கும் நடக்கமாட்டா. மாக்ளர் என்பவன் ஒரு மின்சார இஞ்சினியர். மிட்டில் மேயர் என்பவள் ஒரு பணக்காரப் பெண். ஒரு நாள் மிட்டில் மேயர் வீட்டில் மின்சார விசையில் ஏதோ கோளாறு ஏற்பட்டது. மாக்ளர் அதைச் சீர்திருத்தப் போனான்! மிட்டில் மேயரும் மாக்ளரும் ஒருவரை யொருவர் கண்டனர். கண்ணுடன் கண் நோக்கின. வாய் பேசவில்லை. இருவரும் கண்டனர்; காதல் கொண்டனர். அன்றுமுதல் மிட்டில் மேயர் வீட்டு மின்சார விசையில் அடிக்கடி கோளாறு ஏற்படலாயிற்று. காதலர் இருவரும் களிப்பெய்தி வந்தனர். இந்தத் திருட்டுத்தனம் அவர்தம் பெற்றோருக்கு எப்படித் தெரியும்? கடைசியில் ஒருநாள் மிட்டில் மேயரும் மாக்ளரும் பேசிக்கொண்டிருந்ததை அவர்கள் கண்டார்கள்.

அதற்குப் பிறகு மிட்டில் மேயர் வீட்டில் மின்சார விசையில் கோளாறு ஏற்படவேயில்லை. ஏனென்றால் மேயரின் பெற்றோர் அவளைச் சுவிட்ஜர்லாந்துக்கு அனுப்பி விட்டனர் விஷயம் அவ்வளவில் நின்று வி[...]வில்லை. பள்ளிக்கூடத்தில் அந்தப் பெண்ணுக்கு அடிக்கடி பார்ஸல்கள் வந்தன!

ஒரு நாள் மிட்டில் இருக்கும் அறை[...]யில் விம்மி விம்மி அழுங்குரல் கேட[...]டது. 'இந்தப்பெண் ஏன்இப்படி விம்[...]கிறாள்?' என்று நினைத்துக் கொண்[...] பள்ளிக்கூடத்தலைவர் வந்தார். அப்ப[...] முது மிட்டில் கிராமபோன் பிளே[...] ஒன்றை வைத்தாள். அதில் ச[...] விம்மி விம்மி அழுங்குரல் கேட்ட[...] யன்றி வேறு ஒன்றுமில்[...] இருந்தாற் போலிருந்து மிட்டிலுக்[...] மயக்கம் வந்துவிட்டது. டாக்[...]கள் ஓடிவந்தார்கள். கடைசியில் மி[...]டில் என்ன சொன்னாள்? தான் ம[...]ளரைக் காதலிப்பதாகவும் தன் பெ[...]ரோர் அவனை மணக்கச் சம்மதியாவி[...] தற்கொலை செய்து கொள்வதாக[...] சொன்னாள். டாக்டர்கள் [...] விஷயத்தை மிட்டிலின் பெற்றோ[...]குத் தெரியப்படுத்தினார்கள். மி[...]வின் தகப்பனார் மாக்ளரிடம் போனா[...]

"அப்பா! உன்னால் என்மகள் மன[...] உருகிப் போகிறாள். விம்மி வி[...] அழும் அந்தக் கிராமபோன் ரிகார்[...]குப் பதிலாகச் சிரிக்கும் பிளேட்[...] கொடுத்தனுப்பு. என் மகளை உனக்[...] கல்யாணம் செய்து தருகிறேன்" [...]றார்.

காரியம் சிக்கிரம் நடந்தது. கல[...]ணம் முடிந்தது. காதல் செய்தவேலை[...] வேலை!

## அமெரிக்கரின் மிருகச்செய[...]

நீக்ரோவை உயிரோடு எரித்தனர்

அமெரிக்காவில் ஒரு நீக்ரோ வெள்ளைக்காரப் பெண்களைக் கொ[...]தாகச் சொல்லப்பட்டது. ஆண் [...] அடங்கலாக இருநூறு அமெரி[...] தங்கள் மோட்டார்களில் வந்து [...] நீகிரோவைத் தூக்கிச் சென்ற[...] ஒரு மைதானத்தில் நெருப்புமூ[...] அதில் அந்த நீக்ரோவை எரித்த[...] அமெரிக்க மேயோவுக்கு இந்த அ[...]கம் தெரியவில்லை போலும்!













## கடற்கரைப் பொழுது போக்கு

(திரு. கே. சிவசைலம்)

அந்தி மல்லிகை பூக்கும் நேரமாகிய அந்தி நேரத்தில் நீலக் கடலிலிருந்து வரும் அலைகளும், அவ்வெண்ணிற ஆண் பெண் அலைகளின் ஒலியும், கீழ்க்காற்றும் அக்கடற் கரைக்கு வந்திருந்த அனைவரின் கண்களுக்கும் காதுகளுக்கும், உடல்களுக்கும் முறையே இன்பம் அளித்தன.

இருள் சூழ்ந்த அக்கடற் கரையை அளவற்ற மின்சார விளக்குகளின் ஒளி வியாதியை மருந்து நீக்குவது போல் நீக்கிற்று. பௌர்ணமி தினமாகிய அன்று சந்திரன் கீழ்வானில் உதயமாகித் தனது ஒளியைத் தண்ணீரில் பிரதிபலிக்கச் செய்ததும், அச்சந்திரன் கடலிலிருந்து மூழ்கிஎழுவது போல் உதயமானதுமான இயற்கைக் காட்சி, மானிட ஊனக் கண்களுக்கு விருந்து அளித்தன. இக்காட்சியைப் போன்று அகக்கண்ணுக்கும் புறக்கண்ணுக்கும் மனதுக்கும் உணவளிப்பது எச்செயற்கைக் காட்சி? ஒன்றுகூட இல்லை.

அங்குக் காற்றும், தூசுகளும், மணலும் புடைசூழ நான் இருந்து கடலின் எல்லையற்ற பரப்பையும், கடல் நீரின் நீல நிறத்தையும், அக்கடலி லிருந்து வரும்அலைகள் பூமியை முத்தமிடுவதையும், சந்திரனின் ஒளியையும் பார்த்து இன்புற்றேன்.

அதுசமயம் எனது கண்கள் மூடப்பட்டன. யான் கொண்ட பயம் அளவு கடந்ததாயினும் மடியில் ஒன்றும் இல்லாததால் தைரியமாக இருந்தேன். சில நிமிடங்கள் கழிந்தபின் என் கண்களைத் திறக்கும்படி விட்டுவிட்டான் என் நண்பன் கந்தன்.

நான்:-வாங்கோ! என்ன சோதனையா?

கந்தன்:-அல்ல. விளையாட்டு. வாங்கோ! என்று என்ன கொச்சைத் தமிழ் பேசுகிறாய்?

நான்:-ஆயுள் பூராவுமா பள்ளிவிளையாட்டு?

கந்தன்:-வேடிக்கையாகச் செய்தேன். குற்றமா யிருந்தால் மன்னித்துவிடு.

நான்:-என்ன வேடிக்கை?

கந்தன்:-நாள்பூராவும் தொழிலினால் கவலை. இப்பொழுதாவது வேடிக்கையினால் சந்தோஷிக்கலாம் என்று எண்ணினதுங்கூட என்னைத் தொடரும் நிழல்போல கவலையும் என்னைத் தொடர்ந்துவிட்டது.

நான்:-நீ எத்தனைமணிக்குப் படுக்கைவிட்டு எழுந்தாய்?

கந்தன்:- ஐந்து மணிக்கு எழுந்து நான்கு மைல் நடந்தேன்.

நான்:—நடப்பதுநல்லதுதான், கடிகாரத்தில் மணியடிக்கச் செய்தா (அலாரம் அடிக்கச் செய்தா) ஐந்துமணிக்கு எழுந்தாய்?

கந்தன்:—இல்லை; சூரிய ஒளியினால்.

நான்:—என்ன! ஆறரைமணிக்குத்தானே சூரியன் உதயமாகிறது.

கந்தன்:—பகல் இரண்டு மணிக்குப் படுத்தேன். சன்னல் வழியாகச் சூரிய ஒளி என்மேல் பட்டதால் ஐந்துமணிக்கு எழுந்துவிட்டேன.

நான்:—வெகு நன்று! காலையில் எத்தனை மணிக்கு எழுந்தாய்?

கந்தன்:—எட்டரைமணிக்கு.

நான்:—வட்டிக்குப் போட்டியல்லவா செய்கிறாய். காலையில் நான்குமணிக்கு எழுந்திருக்கவேண்டும் என்றும், பகலில் தூங்கக் கூடாதென்றும் இராமலிங்க சுவாமிகள் திரு அருட்பா மூலம் நமக்கு கட்டளையிட்டு இருப்பதை நீ படித்தும் மறந்து விட்டாயா?

கந்தன்:— மறக்கவில்லை; ஆனால் அப்படி நடக்கத்தான் முடியவில்லை.

நான்:—வெகு நல்லது; என் தம்பி ஒருவன் இருக்கிறான். அவன் வேலை செய்யமுடியவில்லை என்றும் ஆனால் சாப்பாட்டைக்குறைத்துச் சாப்பிடவும் முடியவில்லை என்றும் சொல்வான். அதுபோலவும், கூழுக்கும் மீசைக்கும் ஆசைப்படுவது போலவும் நீ ஒழுங்காக நடக்காமல் பிறவிப்பிணியை நீக்கவேண்டும் என்று எண்ணுகிறாயே?

### பூரி எங்கே!

கந்தன்:—அதுசரி பூரி எங்கே இருக்கிறது.

நான்:—பேசமுடியாவிட்டால் பேச்சை மாற்றுவது உலக இயற்கைதான். சிற்றுண்டிச் சாலையில் பூரி இருக்கும்.

கந்தன்:—பூரி என்னும் ஊர் எங்கிருக்கிறது என்று கேட்டால் சாப்பாட்டு ராமன்மாதிரி சாப்பாட்டு நினைப்போடே சொல்கிறாயே. இராமலிங்க சுவாமிகள் சொல்லியபடி நீ நாவை அடக்கவில்லையே.

நான்:—நான் உன்மீது ஒரு குற்றம் கூறினால் நீயும் ஒன்று கூறிவிட்டாய். ஆனால் நீ கேட்டது இரு அர்த்தம் கொடுக்கும் என்பதை மறந்துவிட்டாய்.

### குரங்கிடமிருந்து கடிதம்

கந்தன்:—எனக்குக் குரங்கிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது.

நான்:—எங்கே பார்க்கலாம் காட்டு.

கந்தன்:—ஒருவருக்கு வந்த கடிதத்தை மற்றொருவர் பார்ப்பது முறையோ? நீயே ஒழுங்கு தவறுகிறாயே?

நான்:—காட்ட மறுப்பதிலிருந்தே கடிதம் பொய் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிகிறது.

கந்தன்:—அக் கடிதத்தைக் கொண்டு வந்திருந்தால் கொடுத்திருப்பேன்.

நான்:—பணம் இருந்தால் கொடுத்து உதவுவேன். ஆனால் பணம் இல்லை எனச் சிலர் பணம் கேட்பவர்களுக்குச் சொல்வார். அது போல அல்லவா நீயும் சொல்கிறாய்.

கந்தன்:—உன் சிநேகன் என்பதற்கு உன்னைப்போல் ஒரு குணமாவது இருந்தால்தானே பொருந்தும். அக் கடிதத்தில் "தலை போயிற்று; போலீ ஸ்டேஷனில் எழுதிவைத்திருக்கிறேன். இப்படிக்குக் குரங்கன்" என எழுதியிருந்தது.

நான்:—எந்த ஊரிலிருந்து அக்கடிதம் வந்தது?

கந்தன்:—அதைத்தானே நான்பார்க்கவில்லை.

நான்:—அந்தக் கடிதத்தை, "தலை போயிற்று; போலி ஸ்டேஷனில் எழுவைத்திருக்கிறேன். இப்படிக்குக் குரங்கன்" என்றும், "தவலை போயிற்று; போலீஸ் ஸ்டேஷனில் எழுதிவைத்திருக்கிறேன். இப்படிக்கு கு. ரங்கன்" என்றும் இரு அர்த்தம் கொள்ளலாம்.

### பந்து

கந்தன்:—ரங்கன் என் பந்து.

நான்:—பந்து பெரியதா? சிறியதா?

கந்தன்:—என் பந்து என்றால் என் இனத்தைச் சேர்ந்தவன் என்று அர்த்தம். யாருடையதலை போயிற்று? அவன் தலைபோய்விட்டால் அவன் எப்படிப் போலீஸ் ஸ்டேஷனில் எழுதிவைக்க முடியும்? ஆகையால் தவலைதான் போயிருக்க வேண்டும். போலீஸ்டேஷனில் என எழுதியிருக்கிறானே.

நான்:—போலி - போலியான என அர்த்தம்.

கந்தன்:— அர்த்தத்தையும் அநர்த்தத்தையும் ஒரு மூலையில் கட்டிபோடு. மணி 9 ஆகிவிட்டது.

நான்:—ஆனால் ஆகட்டுமே அதனால் என்ன?

கந்தன்:—வீட்டுக்குப் போக வேண்டாமா?

நான்:—உன் வீட்டுக்கா? என்வீட்டுக்கா?

கந்தன்:—மண் வீட்டுக்குத்தான். உன்வீடு, என்வீடு, என்று எங்கு இருக்கிறது?

நான்:—சரி போவோம்; வன்எனில் வீடு வாவா என்கிறது; இம்மணற்காடு போ போ என்கிறது.

பிறகு இருவரும் தம்தம் இல்லம் நோக்கிச் சென்றார்கள்.

## கருகின காதல்

(திரு அரி. சீ. பாடகலிங்கம்)

மாலை நேரம். கடலோரம். ஒரு பாறைமீதுஉட்கார்ந்திருந்தாள் விமலா. அவளது பாதங்கள் கடல் நீரை வருடிக் கொண்டிருந்தன. அலையானது, கம்பீரமாக வந்து அவளது குதிகால்களை முத்தமிட்டுச் சென்று கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் இந்நிகழ்ச்சியே. எத்தனைமுறை தோற்பினும் சலியாது உழைக்கும் உத்தமலக்ஷிய தீர புருஷனைப் போன்றிருந்தது, அலையின் கம்பீரக்காட்சி.

எதிரே நோக்கினால் ஒரே நீலநிறக் கடல். அதில் வெள்ளிய அலைகள் சுருண்டு சுருண்டு வந்துகொண்டிருந்தன. இவ்வியற்கையின் இன்பக்காட்சியில் ஈடுபட்டிருந்தாள்; இல்லை; தன் துயரை மறந்திருந்தாள் விமலா. ஆனால் அவளது முகம் சோர்வுற்றிருந்தது. கவலையே உருக்கொண்டிருந்தது எனலாம். அவள் மனம் அலைகடல் துரும்பை ஒத்திருந்தது.

* * *

சுந்தரம் ஒரு நல்ல வாலிபன்; சாந்த சொரூபன்; திடசாலி; மாநிறம் வாய்ந்தவன்; கட்டழகன். அவனும் அங்கு வந்து சேர்ந்தான். உடனே விமலா கூறுகிறாள்:—

"காதல! நம்நினைப்பெல்லாம் பாழ்பட்டுப் போயின. என்று நான் உம்மைப் பூங்காவில் சந்தித்தேனோ அன்றே என்மனம் உம்வசமாயது. நம்மிருவர்களுக்குள் ஏற்பட்ட இக்காதல் வெள்ளத்தைத் தடுக்க என் பெற்றோர்கள் முற்பட்டுவிட்டார்கள்! காதலின் தெய்விகசக்தியை இன்னும் என்பெற்றோர்கள் உணரவில்லை. ஆனால் இனியேனும் உணர்வார்கள் என்ற நம்பிக்கையும் எனக்கில்லை. என் செய்வது? என்னை அக்கிழட்டுத் கடியனுக்கே மாலையிடப் போகிறார்களாம். இல்லை; இல்லை; தவறு; பலியிடப் போகிறார்களாம். என்னுடைய தீர்க்கமான வேண்டுகோள் எதுவும் என் தந்தையிடம் பலிக்கவில்லை. என் உள்ளத்தை உம்மிடம் பறிகொடுத்த பிறகு-ஏன்? உடல், உயிர் யாவும், உமக்கே சமர்ப்பித்த பிறகு - வேறொரு உடலைத் தழுவ நான் விரும்பவில்லை; என் செய்தல் கூடும்" என்று கூறிக்கண்ணீர் உகுத்தாள்.

சுந்தரம் ஒருவாறு, விமலாவைத் தேற்றி, "வருந்தாதே! எல்லாம் ஈசன் செயல்! அவனன்றி ஓரணுவும் அசையாது! வருவது வருக! நீ ஒன்றுக்கும் அஞ்சற்க! நாமிருவரும் ஹிருதயபூர்வமான அன்பினால் கட்டுப்பட்டிருக்கிறோம். ஆகவே, அவ்வன்புக் கயிறு அறுது என்றே நான் நினைக்கிறேன்" என்று கூறித் தேற்றினான். பின்னர் இருவரும் பிரிந்தனர்.

* * *

விமலா வீடுசென்றாள். அங்கே கலியாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவளது தந்தை வெகு மும்மரமாகச் செய்து கொண்டிருந்தார். என்னே! அவர் மதி! மனமொவ்வா மணம்! இன்பமெங்கே?

இக்கல்யாணக் கோலங்களைக் கண்ணுற்ற விமலாவிற்குத் துக்கம்தாங்க முடியவில்லை! விமலாவின் சொற்களை அவள் தந்தை ஒரு சிறிதும் பொருட்படுத்தினாரில்லை. தம் எதேச்சாதிகாரம் ஒன்றே அவர் கண்ணில் தென்பட்டது.

தாம் வரிக்கும் மணவாளனுடன் மனமொத்து வாழவேண்டியவள் தம் புதல்வி அல்லவோ! இதை அவர் உணர்ந்தாரில்லை. பாவம்!

விமலாவின் உள்ளம் உடைந்து சுக்குநூறாயிற்று. செய்வதொன்றும் புலப்படவில்லை. புயற்காற்றிடை அகப்பட்ட மீகாமனில்லா மரக்கலம்போன்று அவளது மனம் தத்தளித்துக் கொண்டிருந்தது. நீருண்ட, இருண்ட மேகங்கள் சூழ்ந்துள்ள இடத்தில் மின்னல் மின்னுவதையொப்ப, அவளது மனத்திலும் ஓர் ஒளி தோன்றிற்று. அதன்படி செய்வதென முடிவு கட்டிவிட்டாள்.

* * *

அதே தினம். நள்ளிரவு. தன் அறையின்விளக்கை ஒருவருமறியா வண்ணம் ஏற்றினாள் விமலா. காகிதமும் பென்சிலும் எடுத்தாள்; தன் காதலனுக்கு ஓர் லிகிதம் வரைந்தாள்; மெல்ல வெளியே வந்தாள். மனஞ் சுழன்றது. ஆயினும் அவள் திடப்படுத்திக் கொண்டாள்; 'விர்' என்று ஓடினாள். கடற்கரை-கற்பாறை - கடல்மட்டுங் குமுறிக்கொண்டிருந்தது. அவ்வளவே.

தன் காதலனுக்கு வரைந்த லிகிதத்தை அக்கற்பாறை மீது ஒரு பாரமேற்றி வைத்துவிட்டு, இறைவனைத் துதித்துக்கொண்டு, குமுறுங் கடலைத் தழுவினாள். அலைகளும் அவளைத் தழுவிக்கொண்டன.

* * *

மறுநாள் காதலன் வந்தான். இனித் தன் காதலியை இச்சென்மத்தில் தான் காணமுடியாதென்பதை அவன் உணரவில்லை! பாவம்! அவனுக் கெப்படித் தெரியும்? விமலா வருவாள், வருவாள் என எதிர்பார்த்தான்; ஏமாந்தான். அவன் மனம் 'டக் டக்' என்று அடித்துக்கொண்டது. சுற்றுமுற்றும் பார்த்தான் சுந்தரம். லிகிதம் தென்பட்டது. அதை அவன் பதைப்புடன் எடுத்தான்; பிரித்தான்.

"காதல! மனமாறக் காதலித்த ஒருவனை அடைந்து இன்பந்துய்த்தற்கு இவ்வுலகம் தடைகல்லாக இருக்கிறது. இயற்கையாக, காதலால் உந்தித் தள்ளப்பட்ட ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழ்வதை இவ்வுலகச் சட்டம் தடுக்கிறது. இதுதான் அறமா? இதுவே அறமாயினும், இத்தகைய அறத்தை எத்தகைய அறக் கடவுளும் சகித்துக் கொண்டிராது. அப்படிச் சகித்துக்கொண்டிருக்கும் ஒரு தெய்வம் அறக் கடவுளன்று. இதுவே என் துணிபு. இவ்வுடம்போடு, நாம் காதலித்தபடி வாழ முடியாமல் என் பெற்றோர்கள் செய்துவிட்டார்கள்.

இப்பிறப்பில் உம்மைவந்துஅடையமுடியாமற்போயினும், இனிவரும் பிறப்புக்களிலேனும் உம்மை வந்து அடைவேன். இது உறுதி. காதல! விடை கொடு! நான் சென்று வருகிறேன். இத்தகைய வேறுபாடுகள் அற்றவிடத்தில் நாம் மீண்டுங் கூடுவோம்! பிரிய!விடை பெற்றுக்கொள்கிறேன். எதிரேயிருக்கும் குமுறும் அலையுடனுவது எனக்குச் சாந்தி ஏற்படட்டும். காதல! சென்று வருகிறேன்.

அன்பான காதலி,
விமலா."

என்று கடிதத்தில் இருந்தது. படித்தான் சுந்தரம் மனம் நொந்தான். "பிரிய காதலி! நானும் இதோ வந்தேன்! என்னையும் உன்னோடு, அணைத்துக் கொள்!'ஏ கடலே! என்னையும் என் காதலி பக்கம் சேர்த்து விடு! காதலற்ற - கானக உலகமே! நாங்கள் செல்கிறோம்" என்று கூறி விட்டுக் குதித்தான் சமுத்திரத்தில். இச்செய்கைக்கு ஆற்றுதலை போல்மேகங்கள் கர்ஜித்தன. மழை பொழிவது, இயற்கை அன்னை கண்ணீர் விடுவது போன்று இருந்தது. சந்திரனும் இக்கொடுமைக்காக வருந்துபவன் போல், மேகத்திரைக்குள் மறைந்தான்.

கதை முடிந்தது; காலம் கெட்டது.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

